உ

சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

ஸ்ரீ பிரகாசாநந்த சுவாமிகள் அவர்களால்

சம்ஸ்கிருதத்தில் இயற்றப் பெற்ற

# வேதாந்த சித்தாந்த முக்தாவலி.

இது

பரசமய கோளரியாரும், மண்டலேசுவரரும்,

உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாசாரியரும்,

கோவிலூர் மடம், திருக் களர்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

அவர்கள் மாணுக்கரும்,

திருப் பூவண மடாதிபதியும் ஆகிய,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்

தமிழில் வசந வடிவமாக மொழி பெயர்க்கப் பெற்று

மதுரை, ராஜேஸ்வரி பிரசில் அச்சிடப்பட்டது.

 1937 [விலை அணு எட்டு.

24-4

பாயிரம்.

கருக்கெடுத் தருளுங் கயமுக விறையைக் கலியுக வரதசண் முகனை, இருக்குகள் புகழும் பாரிஜா தவன விறைவனை யமுதவல் லியினைத், திருத்தம தாகத் தமைச்சரா ணடைந்த சிடர்கள் பவந்தனைக் கெடுக்குந், திருக்களர் வீர சேகர ஞான தேசிக னடிமலர் பணிவாம்.

காவலூர்ச் சிக்கற் பொருள்வைகன் னகர்வாழ் கவிஞு முகந்ததே சிகனைக், கோவிலூர் வாழு முக்திரா மேச குருபர னடிக்கமலத்தை, யாவலி லருணா சலவிறை பதத்தை யருஞ்சிதம் பரகுரு வடியை, யோவலில் வீர சேகர குருவி னொளிமலர்ப் பதத் தினைப் பணிவாம்.

திருட்டியின் வாதஞ் சிருட்டியின் வாதஞ் சிறக்கநற் றேவவா ணியினியில், பொருட்டிகழ் பிரகா சாநந்த சாமி புகன்றன ரதனையாந் தமிழில், மருட்டிகழ் வின்றிக் கத்திய மதனில் வரைந்தனன் காசிகா நந்தன், முருட்டிகழ் நல்வே தாந்தசித் தாந்த முக்தாவ லீயினைத் தானே.

உ

சிவமயம்.

# முகவுரை.

இவ்வுலகத் துள்ளவர்களால் விரும்பப்படுவது சுகம் ஒன்றே, அதனை அடைவதற்குச் சாதநமாக உலகத்துள்ள மதங்கள் யாவும், த்வைதம் - த்வைதாத்வைதம்-அத்வைதம் என்னு மூன்று பிரமாகக் கூறுகின்றன. அவற்றுள், த்வைத மார்க்கத்திலும், த்வைதாத்வைத மார்க்கத்திலும், நித்தியமான சுகம் அடையப்படுவ தில்லை. அத்வைத மார்க்கம் ஒன்றில் தான் நித்தியமான சுகம் தனது ஸ்வரூபமாக அடையப்படுகின்றது. அதனால், கலியில் சர்வஞ்ஞ பரமேசுவரனே சங்கராச்சார்ய ஸ்வரூபமாக அவதரித்து 16 பாஷ்யங்களையும், 100 பிரகரணக் கிரந்தங்களையும் இயற்றி யுபகரித்தனர். அதன் வழியாக அநேகம் பெரியார் அநேகம் பாஷைகளில் அநேகங் கிரந்தங்கள் செய்யுளாகவும், வசநமாகவும், செய்திருக்கின்றனர். ஆயினும், திருஷ்டி சிருஷ்டி வாதம், சிருஷ்டி - திருஷ்டி வாதம் (நாநா ஜீவ வாதம், ஏக ஜீவ வாதம், மூன்று சத்தா வாதம் இரண்டு சத்தா வாதம்) என்பவற்றை மாத்திரம் விசாரிப்பதாக அதிகக் கிரந்தங்களில்லை. அதனைக் கருதி, ஞாநாநந்த சுவாமிகளின் சிஷ்யர் "பிரகாசாநந்த சுவாமிகளால்" சம்ஸ்கிருதத்தில் 61 சுலோகமும், வசநமும், அடங்கியதாக "வேதாந்த சித்தாந்த முக்தாவலீ" என்று பெயரீந்து ஒரு நூல் அதி அற்புதமாகச் சங்கை சமாதாநத்தினோடு செய்யப்பட்டிருக்கின்றது.

இந் நூல், திருஷ்டி சிருஷ்டி வாதம், சிருஷ்டி திருஷ்டி வாதங்களை நன்றாக விளக்கிக் காட்டுகின்றதென்பது, ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களால் இயற்றப் பெற்ற "சித்தாந்த லேச சங்கிரகம்" என்னும் நூலால் நன்கு வெளியாம்.

கற்கற்றா சம்ஸ்கிருத சர்வ கலா சாலையில், வேதாந்த தரிசநத்தின் முக்கிய பரீக்ஷையாக, இந்த வேதாந்த சித்தாந்த முக்தாவலீயினையே அரசாங்கத்தாரும் ஏற்படுத்தி யிருக்கின்றார்கள்.

இந் நூல் இயற்றிய பிரகாசாநந்த சுவாமிகளின் ஜந்ம பூமி, இருப்பிடம் முதலியனவும், வேறு யாதேனும் கிரந்தம் இயற்றி யிருக்கின்றார்களா என்பதும் நன்கு புலப்பட வில்லை. இந் நூலுக்கு கல்கற்று ஜீவாநந்த வித்தியா சாகர பி. எ. அவர்களால், பரிசோதித்து அச்சிடப்பட்ட, செய்தவர் இன்னர் என்று புலப்படாத, ஒரு வியாக்யாநமும் அருமையினும் அருமையானதாக இருக்கின்றது.

இந்த "வேதாந்த சித்தாந்த முக்தாவலி" என்னும் நூலை மட்டும் தமிழ் மக்கட்குப் பயன் படும்படி வசநமாக, 1915 வருஷம் மொழி பெயர்த்தும், இதுகாறும் பல இடையூறுகளால் பலருக்கும் உபகாரம் ஆகும்படி அச்சிட்டு வெளியிட முடியாதபடி யிருந்தது. இது போது, திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் திரு வருளால் இனிது முற்றுப் பெற்று, கிரௌண் 1—8 பேஜ் சைசில் 28 பவுண் கிளேஸ் பேப்பரில் 122 பக்க அளவினை உடையதாக அச்சிடப்பட்டிருக்கின்றது.

இந் நூலை வேதாந்தம் படிப்போர் ஒவ்வொருவரும் வாங்கி வாசித்துத் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் தன்மையை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். எல்லாரும் இன்புற் றிருக்க விருப்பம்.

1937- ஆகஸ்டு
திருப் பூவணம். } காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்.





ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.

मण्डलेश्वरः परसमय पंजाननः उभय भाषा वेदांद प्रवर्तकः
वीरशेखर ज्ञान देशिक शिष्यः तिरुप्पूवण मठातीशः
श्री काशिकानंत ज्ञानाचार्य स्वामिनः

இந் நூல் இயற்றிய பிரகாசானந்த ஸ்வாமிகளின் ஜன்ம பூமி, இருப்பிடம் முதலியனவும், வேறு யாதேனும் கிரந்தம் இயற்றியிருக்கின்றார்களா என்பதும் நன்கு புலப்படவில்லை. இந் நூலுக்கு கல்கத்தா ஜீவானந்த வித்தியா சாகர பி. எ. அவர்களால், பரிசோதித்து அச்சிடப்பட்ட, செய்தவர் இன்னார் என்று புலப்படாத, ஒரு வியாக்யானமும் அருமையிலும் அருமையானதாக இருக்கின்றது.

இந்த "வேதாந்த சித்தாந்த முக்தாவலி" என்னும் நூலை மட்டும் தமிழ் மக்கட்குப் பயன் படும்படி வசனமாக, 1915 வருஷம் மொழி பெயர்த்தும், இதுகாறும் பல இடையூறுகளால் பலருக்கும் உபகாரம் ஆகும்படி அச்சிட்டு வெளியிட முடியாதபடி யிருந்தது. இது போது, திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் திரு வருளால் இனிது முற்றுப் பெற்று, கிரௌன் 1—8 பேஜ் சைசில் 28 பவுண் கிளேஸ் பேப்பரில் 122 பக்க அளவில் உடையதாக அச்சிடப்பட்டிருக்கின்றது.

இந் நூலை வேதாந்தம் படிப்போர் ஒவ்வொருவரும் வாங்கி வாசித்துத் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் தன்மையை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். எல்லாரும் இன்புற்றிருக்க விருப்பம்.

1937 - ஆகஸ்டு
திருப் பூவணம். } காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்.





ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.

मण्डलेश्वरः परसमय पंजाननः उभय भाषा वेदांद प्रवर्तकः
वीरशेखर ज्ञान देशिक शिष्यः तिरुप्पूवण मठातीशः
श्री काशिकानंत ज्ञानाचार्य स्वामिनः



ஓம்

தத் சத்

பரப் பிரஹ்மணே நம:

# வேதாந்த சித்தாந்த முக்தாவலி.

1. இருமைய திட்டமு மின்புஞ் சோதியும்
அருவவி யயமு முடையவாந் மாவைப்
பெருசுரு தியினின் பெருமைநிச் சயஞ்செய்
திருமையுத் தியதனை யிதன்கணி யம்புவாம்.

அவ்விடத்து ஆதிக்கண் தத்வ ஸ்மரண ரூப மங்கலத்தைச் சூசிப்பித்து, அபிதேயப் பிரயோஜநங்களைச் சாக்ஷாத்தாகப் பிரதிபாதித்துச் செய்யத் தக்கதை 'யிருமை யதிட்டம்' என்ப தாதியால் பிரதிஞ்ஞை செய்கின்றார். கூறிய நான்கு விசேஷண விசிஷ்ட ஆத்மாவைச் சுருதியால் அபரோக்ஷஞ் செய்து, புகன்ற நான்கு விசேஷண விசிட்ட ஆத்மாவினிடத்துச், சுருதி அநுக்கிராஹக தர்க்கம் கூறப் படுகின்ற தென் றங்வய மாம்.

அற்றேல், ஆத்ம சாக்ஷாத்காரத்தில் சுருதியின் அபேக்ஷையே யின்று; தேகாதிகளே ஆத்மா வாகலின். அதுவும் லௌகிகப் பிரத்யக்ஷாதி சித்த மாகலின் எனின், அற் றன்று.

2. ஆத்மா நித்தியமா? அல்லது, அநித்தியமா? முதற்கண் பேதம் ஸ்பஷ்ட மாம். இரண்டாவதன்கண் கிருத ஹாநி அகிர்தாப்யாகம மாம்.

ஆத்மா நித்திய மாகலின், ஜகத் வைசித்ரிய மானது அதிர்ஷ்ட காரண மாகலின்; கொள்ளாக்கால். வைசித்ரியம் பொருந்தாமையின், திருஷ்ட பதார்த்தத்திற்கு க்ஷண விநாசி யாகலின். அதிர்ஷ்டத்திற்கும் பூர்வ ஜந்ம சம்பந்தித் தன்மையால், அத ஞசிரய ஆத்மா அநாதி யாகலின்; அநாதி பாவ பதார்த்தத்திற்கும் நித்தியத் தன்மை நியம மாகலின். அங்கீகரியாக்கால், கிருத ஹாநி அகிர்தாப்யாகமம் வருதலின், தேஹாதி விகார சமூகத்திற்கு அநித்தியத்வ, கிருதகத்வ, ரூபவத்வ, ஜடவத்வ, பரிச்சிந்நத்வாதிகளால் அநாத்மத் தன்மை நிச்சயஞ் செய்தலின், "அரே மைத்ரேயி! இவ் வாத்மா அவிநாசி! நாச மற்ற தர்ம முடையது" என்பதாதி சுருதியாற் சித்தித்த அந்த நித்திய மான ஆத்மாவிற்கு, அபரோட்சஞ் செய்வதில், வேறு மார்க்க மின்மையின், சுருதி அபேட்சை யிருக்கின்ற தென்று அபிப்ராயஞ் செய்து 'அவ்யயம்' எனக் கூறப்பட்டது. தர்மத்தாலும், சொரூபத்தாலும், அவ்யவத்தாலும், விநாச மெதற்கின்றோ, அதற் கவ்யய மெனப்படும். நிரவயவ, நிர்த்தர்மக, கூடஸ்த, நித்ய பரிபூரண மென்பது பொரு ளாம்.

அற்றேல், ஆத்மாவின்கண் பிரமாண மிருக்கின்றதா? இன்றோ? இன்றேயின், அதற்கு அசத்துத் தன்மைப் பிராப்த மாம். பிரமாண மின்றிப நர சிருங்காதிக்குச் சத்துத் தன்மை பார்ப்ப தின்று. முதற்கண், அது லௌகிகமா? வேதமா? முதல தன்று; அதற்கு நிர்த்தர்மகத் தன்மையான், இந்திரியங்கட்கும் ரூபாதி யுடைய பராக் விஷயத் தன்மையால், அதன் வியாப்த ஏதுவின் நிச்சய மின்மையின், அநுமாந விஷய மின்மையின். பிரத்யக்ஷாதி விஷய மின்மையால், லௌகிக வாக்கிய அவிஷய மாகலின், அத னந்நிய விஷயம் சம்பாவனை செய்தற்குச் சக்கிய மன் றாகலின். இரண்டாவதன்கண்ணும், வேத ஜந்ய ஞாந பாஸ்யத் தன்மையா? வேறு பிரகாரத்தால் விளங்கப்பட்டதற்கு, வைதிக ஞாந நிவிர்த்தியால் அஞ்ஞாந விஷயத் தன்மையா? முதற்கண், வேத ஜந்ய ஞாந பாஸ்யத் தன்மையால், கடாதி போன்று ஜட மாகலின், அநாத்மத் தன்மை வரும். இரண்டாவதன்கண், அதன் பிரகாராந்தரமா? சுவயம் பிரமாணாந்தரமா? அந்தியத்தில், தோஷம் கூறி யிருத்தலின், முதலது எஞ்சுகின்றது. அதுவும் பொருந்துவ தின்று, சுவயம் பிரகாசமானத்திற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை பொருந்தாமையின். சுவயம் பிரகாசமான சொரூப மத்யாநத்திலிருக்கும் ஆதித்தனிடத்தில் இருளைச் சம்பாவனை செய்வதற்குச் சமர்த்த மின்று.

இவ் விடத்துச் சிலர் ஆத்மாவிற்கு அஞ்ஞாந விஷயத் தன்மையைச் சஹியாதவர்களாய்ப் பந்த மோட்ச வியவஸ்தையை யாசிரயித்துச் சுருதி சித்த அத்வைதத்தையும் சங்கோசஞ் செய்து சங்கிக்கின்றனர்.

3. அஞ்ஞாந மானது ஜீவனை யாசிரயித்துப் பிரஹ்மத்தை விஷயஞ் செய்வ தென்பது தத்துவ வித்துக்களின் சம்மதம். ஆத்மா அஞ்ஞாந கோசர மென்று கூறு மிவ் வாக்கியம் அதனின் விருத்த மாம்.

அற்றேல், ஆத்ம சப்தத்தால் ஜீவன் கூறப்படுகின்றான். அவனும் அஞ்ஞாநத்திற்கு ஆசிரயமே, விஷப மன்றும். விஷயத் தன்மையோ, பிரஹ்மத்திற்கே யாம். அந்த ஜீவனும் அநேகனே. அங்கீகரியா தொழியின், வியவகாரம் பொருந்தா தாம். எவனுக்குச் சிரவணாதி அப்யாச சாமர்த்தியத்தால் பிரஹ்மாத்ம ஞாநமோ, அவனுக்கு மோட்ச மாம்; அவனி னின்றும் அந்நியனுக்குப் பந்த மாம். இதனானே அநேக அஞ்ஞாநங்கள் கற்பிக்கப்படுகின்றன. கொள்ளா தொழியின், அஞ்ஞாநம் ஒன்றாகு மிடத்து ஓரே ஞாநத்தால் அஞ்ஞாந அதன் காரியம் சர்வமும் நிவிர்த்தி யாகு மிடத்துப் பிரத்யட்சாதி சித்த ஜகத்திற்கு அநுபவ மின்மை வரும். இவ் வளவு கால பரியந்தம் ஒருவருக்கும் ஞாந முண்டாக வில்லை யென்பது பொருத்த மன்று; சாங்கோபாங்க சாதந அநுஷ்டாநஞ் செய் திருக்கும் வியாச வசிஷ்டாதி பிராசீநர்கட்கும் ஞாந முண்டாகா திருக்கு மாயின், இப் பொழு துள்ள நம் முதலியோர்கட்கு ஞாநோற்பத்தியைச் சம்பாவனை செய்தற்கும் அசக்பத் தன்மையால், சிரவணாதிப் பிரவிர்த்தி யின்மைக்கண், மோட்ச மின்மைப் பிரசங்கம் வருதலின்.

அற்றேல், வியவஸ்தையின் அநுரோதத்தால் அஞ்ஞாந பேத கற்பனை போன்று, பிரத்யக்ஷாதிப் பிரமாண அநுரோதத்தால் துவைதஞ் சத்தியமே என் பொருந்தா தெனின், அவ் விடத்துக் கூற வேண்டும்.

4. பிரத்யட்சாதிப் பிரமாணங்கட்குப் பாதப் பிரமாணத் தன்மை யாயின், அவ் விடத்து அநவஸ்தை ஸ்பஷ்டமாம். ஸ்வதஸ்த்வத்தில், தோஷ சம்சயங்கள்.



இந்தப் பிரத்யக்ஷாதிக்குப் பிரமாண்யம் வியவகார சமர்த்த அர்த்த விஷயத் தன்மையா? சர்வப் பிரகாரத்தும் அபாதிதார்த்த விஷயத் தன்மையா? முதற்கண் கல்பித அர்த்தத் தன்மையானும் விரோத மின்று. இரண்டாவதில், அது ஸ்வதப் பிரமாணமா? பரதப் பிரமாணமா? முதல தன்று; பிரத்யக்ஷாதிக்குச் சம்பாவிக்கப்பட்ட தோஷத் தன்மையால் ஸ்வப்பிராமாண்யத்தைக் குறித்துத் தோஷா பாவத்தைக் கிரகிக்கும் வேறு பிராமாண சாபேக்ஷ யாகலின், ஸ்வத (ப் பிரமாண)த் தன்மை யின்மையின். இரண்டாவ தன்று; கிரகிக்கப்பட்ட பிராமாண்யத்திற்குப் பிராமாண்ய நிச்சயஞ் செய்யு மிடத்து அநவஸ்தை யாகலின்.

கிரகிக்கப்படாத பிராமாண்யத்திற்கு அங்ஙன மாயின், பிராமாண்ய நிச்சயம் வியர்த்த மாகலின். பிரதமத்தானே விஷய நிச்சயஞ் செய்திருத்தலின். மற்றும், "ஈண்டு நாநா அற்பமு மின்று.", "மாயையைப் பிரகிருதி என மதிக்க" என்னு மிரண்டும் பிரதிபந்ந உபாதியில் நிஷேதிக்கப்படும் மாயாப் பிரகிருதித் தன்மைகளால் சம்பூர்ண ஜகத்திற்கும் மித்யாத் தன்மை தரிசித்தலின், அதன் விஷயப் பிரத்தியக்ஷாதி அப்பிராமாண்யம் சுருதியானே காட்டப்பட்டிருத்தலின். ஆதலின், வியவஸ்தையின் அநுரோதத்தால், "பரமாத்மா மாயைகளால் அநேக ரூப மாயிற்று" என்னும் சுருதியானும், மாயைகளால் என்னும் பன்மை வசந அநுரோதத்தாலும், ஜீவ ஆசிரய பிரஹ்ம விஷயங்கள் அநேக அஞ்ஞாநங்க ளாகலின், எங்ஙனம் ஆத்மாவிற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை விகற்பிக்கப்பட்டது? என்னு மிது சங்க்ஷேப மாம்.

இவ் விடத்துக் கூறப்படுகின்றது:—

5. ஜீவப்பிரஹ்மப் பிரயோகங்களால் ஒரே வஸ்துவா? அல்லது, இரண்டு வஸ்துக்களா? முதற்கண்ணே எம திஷ்டமே யாம். இரண்டாவதன்கண் உமது மத நாச மாம்.

ஜீவப் பிரஹ்ம சப்தங்களால் ஆத்மாவே கூறப்படுகின் றதா? அல்லது, ஜீவ சப்தத்தால் ஆத்மாவும், பிரஹ்ம சப்தத்தால் அதன் அந்நியமுமா? முதற்கண் ஆத்மாவிற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை யின்மை யாங்ஙனம்? பிரஹ்ம சப்தத்தாலும் அதுவே கூறப்படுதலின். அற்றேல், ஆத்மா விற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை யாயின், அதற்குப் பாநம் யாங்ஙனம்? தமசால் மறைக்கப்பட்டிருத்தலின். அந்தகா ரத்தால் மறைக்கப்பட்ட கடம் பார்க்கப்படுவ தின்று எனின், அற் றன்று. அத்வய ஆநந்த ரூபத்தானே அதற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை யாகலின். சைதந்ய மாத்திரத் திற்கே பாஸமாநத் தன்மை யாகலின்; அதற்கும் அஞ்ஞாந விஷய மின்மையின். கொள்ளா தொழியின், அஞ்ஞாநத் திற்கும் அசித்தி வருதலின். அத்வய ஆநந்த சொரூபம் சைதந்ய மாத்திரத்தால் அபிந்நமே யெனின், சத்தியம். உண்மையாக அஃதே. ஆயின், அஞ்ஞாந விஷயத் தன்மை வியவஸ்தை யாங்ஙன மெனின், அநாதி சித்த அஞ்ஞாந சம்பந்தத்தான். ஸ்வயம் பிரகாச பரிபூர்ண ஆநந்த சொரூ பத்தால் விளங்கினும், ஆத்மாவி னிடத்தில் மித்தையாகவே பேதத்தைக் கற்பித்து அத்வய ஆநந்த சொரூபத்திற்கு விஷயத் தன்மை கூறப்பட்டது. சைதந்ய மாத்ரமே விளங்குகின்றது; ஆநந்த சொரூபம் விளங்க வில்லை யென்று பிராந்தன் பிரதீதியின் அநுரோதத்தால். இப் பிரதீதிக்



குப் பிராந்தத் தன்மை யாங்ஙன மெனின்; பரமப் பிரே மையின் ஆஸ்பதமான ஆத்மாவிற்கு ஆநந்த சொரூபத் தானே விளங்குதலின் என்று கூறுகின்றோம். அங்ஙன மாயினும், பரமார்த்தமாக அஞ்ஞாநத்திற்கு விஷய ஆசிர யங்களின் பேதம் நிரூபிக்க வில்லை யெனின், சத்தியம்.

6. எதனால் அவித்தை யாகிய தம மானது ஸ்வாசிரய அபிந்ந விஷய மாகின்றதோ, அதனால் அங்ஙன மாம். எங்ங னம் பாஹ்ய இருள் பார்க்கப்படுகின்றது?

அந்தத் தம சப்த வாச்சியத்திற்கு அத னபேட்சை யின்மையின், கிருகத்தின் மத்தியிலிருக்கும் இருள் தன தாசிரய கிருகத்தி னுள்ளிருக்கும் தேசத்தை விஷயஞ் செய்ய மாட்டா தென்ப தின்று. எதனால் அது அதிர்க் தத்தை யபேக்ஷிக்கின்றது? இதனானே இரண்டாவது மன்று. மற்றும்,

7. பிரஹ்மாத்மாக்களின் விபிந்நத் தன்மையில் ஸ்வா பாவிக பேதமா? அல்லது, ஔபாதிக பேதமா? சர்வப் பிரகாரத்தும் பொருத்த மின்மையே யாம்.

பிரஹ்மாத்மாக்கட்கு ஸ்வாபாவிக பேதமா? ஔபா திக பேதமா? முதற்கண், ஆத்ம பிந்நத் தன்மையால் பிரஹ் மத்திற்கு ஜடத் தன்மை வரும். ஆகவே, “விஞ்ஞாநம் ஆநந்தம் பிரஹ்மம்” என்னும் சுருதிக்குக் கோப முண்டாம்; பிரஹ்மத்திற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை பொருத்த மின்மையு மாம். ஆத்மாவிற்கும் பிரஹ்ம பிந்நத் தன்மை யில் கடாதி போன்று அநாத்மத் தன்மை வரும். இரண்

டாவதன்கண்ணும், உபாதி ஜந்யத்வம், அல்லது, ஞேயத்வம், அல்லது, தந்த்ரத்வம், ஔபாதிகத்வ மாம். ஜீவப் பிரஹ்ம பேதத்திற்கு உபாதியும் அஞ்ஞான மென்றே கூறல் வேண்டும்; அஞ்ஞான காரியம் ஒரு காலத் திருப்ப தாகலின், ஜீவப் பிரஹ்ம விபாகங்கள் உபாதி யின்மை யாகலின். அவற்றுள், முதல தன்று. பேத உத்பத்தியின் பூர்வமே, கேவல ஆத்மாவி னிடத்தில் அஞ்ஞானஞ் சித்தித்தலின் பேத அபேட்சை யின்மையின்; ஸ்வதந்த்ர அஞ்ஞானம் அங்கீகரிக்காமையின். இரண்டாவ தன்று; அஞ்ஞானம் ஜடமாகலின், பாசகத் தன்மை பொருத்த மின்மையின். மூன்றாவது மன்று; தந்திரத்துவம் லோகத்தில், ஜந்யத் தன்மையாலும், ஆசிரிதத் தன்மையாலும், பாஸியத் தன்மையாலும், மூன்று விதமாகப் பார்க்கப்படுகின்றது. அவற்றுள், அஞ்ஞான நிரூபித அந்ய தமப் பிரகாரத்திற்கும் பிரகிருதத்தில் பொருத்த மின்மையின், தந்திரத்துவம் பொருந்தாதாம். அஞ்ஞானாத்ம சம்பந்தம் போன்று, பிரஹ்ம பேதத்திற்கு அஞ்ஞான தந்திரத்துவ மெனக் கூறற்க; சம்பந்தத்திற்குச் சம்பந்தி தந்திரத்துவ நியம மாகலின். பேதமும் அத் தன்மை யின்மையின். ஆகலின், ஜீவப் பிரஹ்ம விபாக மின்றிய ஆத்மாவை ஆசிரயித்து அதனையே விஷயஞ் செய்கின்றதென அஞ்ஞான விஷயத் தன்மை ஆத்மாவிற்குச் சித்த மாம். அது சர்வஞ்ஞாத்ம மகா முநியால் சம்க்ஷேப சாரீரகத்தில், "ஆசிரயித் தன்மை, விஷயத் தன்மையை யடைவது கேவலம் விபாக மின்றிய சித்தே யாம். பூர்வம் சித்தித்த அஞ்ஞான மானது, பின்னர்ச் சித்தித்த ஜீவனை ஆசிரயிப்பது மன்று, விஷயமு மன்று" என்று கூறப்பட்டிருக்கின்றது.



அங்ஙன மாயினும், அந்த அஞ்ஞானம் ஒன்று, அல்லது, அநேக மென்று எங்ஙனம் நிர்ணயம எனின், ஒன்றே என்று கூறுகின்றோம். அதிற் சாதகம் என்னை எனிற், கூறப்படுகின்றது.

8. அஞ்ஞானத்தில் லௌகிகப் பிரமையும், வைதிகப் பிரமையும் பார்க்கப்படுவ தின்று, காரிய திருஷ்டியாற் கற்பிக்கப்படுகின்றதெனின், லாகவத்தா லஃதொன்றே யாம்.

அஞ்ஞானம் வேத சித்தமா? அல்லது, லௌகிகப் பிரத்யக்ஷாதி சித்தமா? அல்லது, பார்க்கப்படும் காரியம் வேறு பிரகாரத்தாற் பொருந்தாமையின் கற்பிக்கப்படுகின்றதா? அவற்றுள், முதல தன்று; பூர்வ காண்டத்திற்குக் கர்ம மாத்திர விஷய மாகலின், வேதாந்தங்கட்கும் பரிபூர்ண சச்சிதாநந்தப் பிரஹ்ம மாத்ர விஷய மாகலின், அவ்விடத்தே பல சம்பந்த மாகலின். அஞ்ஞானாதியின்கண் அஃதின்மையின், அதன் பிரதிபாதக மின்மையின். இரண்டாவது மன்று; ஸ்பஷ்டமாகப் பிரத்தியக்ஷாதியாற் சித்திக்கில், விவாத மின்மைப் பிரசங்கத்தால். ஆகலின், ஸ்வயம் அசங்க உதாசீநமாயும், சதா தனதாநந்தத்திற் றிருப்தமாயுமுள்ளதற்கு, அசத்ய அநேகவித சுக துக்காதி ரூபப் பிரபஞ்ச சிருஷ்டி பொருந்தாமையின், அஞ்ஞானம் கற்பிக்கப்படுகின்றது என்றே கூற வேண்டும்; வேறு கதி யின்மையின். ஆகவே, கற்பிக்கப்படும் அஞ்ஞானம் ஏகமா? அநேகமா? என்னும் விவாதத்தில், ஒன்றாய நித்திரா தோஷத்திற்கும் அநேகவித காரிய ஜநகத் தன்மை ஸ்வப்நத்தில் பார்த்தலின், லாகவ சக காரியோடு, வேறு வழித்தாகப் பொருந்தாதாக,

விசித்ர சக்தியை யுடைய ஒரு அஞ்ஞானத்தைக் கொண்டு விசிராந்தி யடைகின்ற தென்பது யுக்த மாம்.

இதனுனே, அஞ்ஞானம் ஜீவ உபாதி யாகலின், அதுவும் ஏக மாகலின், அசுனே உபாதியாக வுடைய ஆத்மா ஜீவ ணுயின் ஒன்றே யாகின்றது என்று ஏக ஜீவ வாதிகள் கழறு கின்றனர். புகன்ற அநுபபத்தி சித்தார்த்த அநுவாதி சுருதியும் (இருக்கின்றது). "சமாந அநேக பிரஜைகளைச் சிருஷ்டிக்கும் லோஹித சுக்ல கிருஷ்ணத்தை யுடைய ஒரு அஜையை, ஒரு அஜன் சேவிப்பவனுய்த் தூங்குகின்றுன், வேறு அஜன் புசிக்கப்பட்ட போகத்தை யுடைய இதனைத் தியாகஞ் செய்கின்றுன்" என. இதன் பொருள்—அசத்திய மான ஜகத்திற்கு அவித்யா காரணத் தன்மை கூற வேண்டு மிடத்து, அது ஜந்யமா? அஜந்யமா? என்று சம்சய முண்டா குங்கால், ஜந்ய மன்று என்று அஜை யெனக் கூறப்பட்டது. அவித்யா வாசக பத மின்மை யின்று; அஜை என்று ஸ்திரீ லிங்கத்தால் நிர்த்தேசம் பண்ணப்பட்ட இஃதே அதன் வாசக மாகலின். அதற்கு அநேகத் தன்மையை, ஒன்று என்பதால் வியாவிர்த்திக்கின்றுர். அதற்கு விசித்ர காரிய சாமர்த்தியத்தை, திரி குண ரூபத்தால், லோகித என்ப தாதியால் சமர்த்தநஞ் செய்கின்றுர். அவ்வித அவித்யா உபஹித ஜீவனுக்கு உத்பத்தி, அஜன் என்னும் பதத்தால் நிவாரணஞ் செய்யப்படுகின்றது. அந்த ஜீவனுக்கு அநேகத் தன்மையை, ஒன்று என்பதால் நிஷேதஞ் செய்கின்றது. அற்றேல், ஜீவ சம்பந்தமான அநேகத் தன்மை லோகத்தி லநுபவிக்கப்படுகின்றது. அஃதெங்ஙனம்? ஏகத் தன்மை யென் றுசங்கித்து, அபேதம் உபநிஷத் பிரசித்தத் தன்மை யும், யுக்தி சித்தத் தன்மையுமாம், எனப் பிரசித்தார்த்தமாய



ஹி என்னும் சப்தத்தாற் கூறுகின்றது. அற்றேல், ஸ்வயம் பிரகாச பிரஹ்ம அபிந்ந மாகலின், ஜீவனுக்கு எங்ஙனம்? அதன் விலக்ஷணுவஸ்தை என்னு மிதனுல், தூங்குகின்று னெனக் கூறப்பட்டது. அந்த அவித்தையை யநுசரித்து நித்திரை செய்பவன் போன்று அஞ்ஞானத்தால் ஆவரிக்கப் பட்டவனுய் ஞாந நேத்ரம் மூடப்பட் டிருக்கின்ற தென்பது பொரு ளாம். பின்னுல் காரியாகாரத்தினு லிருக்கும் அத னையே சேவித்து ஸ்வப்ந திருஷ்டாப் போன்று சம்சாரி ஆகின்று னென, சேவித்து என்னும் பதத்தாற் கூறப்படு கின்றது. அற்றேல், அவித்தைக்கு அநாதித் தன்மையான் அவிநாசி யாகலின், மோக்ஷ மின்மைப் பிரசங்கம் வரு மென்னு மிதனுல், இதனைத் தியாகஞ் செய்கின்று னெனக் கூறப்படுகின்றது. வாக்கியத்தி னின்று முண்டான ஆத்ம தத்வ சாட்சாத்காரத்தினுல் நிவிர்த்தி யாகின்ற தென்பது பொரு ளாம். அவித்தை தியாகஞ் செய்யப்படு மாயின், எங்ஙனம் ஆத்மா அதனை ஆசிரயித்த தாகின்றது என்று சங்கித்து, போகத்தின் பொருட்டு அவித்தையின் ஆசிரய மாம். போகமும் அதனுல் உற்பத்தியாய் விட்டமையின், இப்பொழுது தனது ஆத்ம தர்சநத்தால் பிரயோஜந சூந்யத் தன்மையை யங்கீகரிப்பவன், விடுகின்றுன் என்று, புஜிக்கப் பட்ட போகம் என்னும் பதத்தாற் கூறப்பட்டது. எதனுல் போகம் புஜிக்கப்பட்டதோ, அதற்குப் புஜிக்கப்பட்ட போகம் என்பது பதச் சேத மாம்.

அற்றேல், அவித்யா விசிஷ்டன், ஜீவ னுகலின், அவித் தையும் ஜீவ சொரூபத்தின் அந்தர்ப்பாவ மாகலின், எங் ஙனம்? விடுகின்றுன் எனக் கூறப்பட்டது என்னு மிதனுல், அஜன் வேறு எனக் கூறப்பட்டது. அஜன் - ஜீவன், அவித்

தையி னின்றும் அந்நியனே. அவித்தையி னந்தர்ப்பாவத் தாலே ஜீவத் தன்மை யின்று. அவித்தை ஜட மாகலின், ஜீவனும் சேதந மாகலின், ஜீவ உபாதித் தன்மையா லங்கீ கரித்தலானும்.

9. ஜீவ அபேதத்தில் உமக்குப் பந்த மோக்ஷ விய வஸ்தை எங்ஙன மாம்? எங்ஙனம் பார்க்கப்பட்டதோ, அங் ஙனமே ஆகுக; திருட மாகலின்; ஸ்வப்ந திருஷ்டம் போன்று.

அற்றேல், ஒரே ஜீவ னாயின், ஒருவன் பத்தன், ஒரு வன் முத்த னென்னும் வியவஸ்தை யாங்ஙனம்? அற்றேல், இவ் விடத்துப் பொருத்த மின்மை யாது? த்வைதம் அநுபவ சித்த மாகலின். அநுபவமே பொருத்த மன்று. ஒருவனது முத்தியினால் சகல சம்சார நாசத்தா லெனின், அற் றன்று; அந்தக்கரணாதிக்குத் தகுதியான அவித்யா காரியத் தன்மை ஸ்வீகரித்தலான். கரண அநுபபத்தி யின் மையான். விஷய மின்மையால் பிராமாண்யம் பொருந்தா மையின், அநுபவம் பொருந்தா தெனின், அவ் விடத்துக் கூற வேண்டும், எவ் வித விஷயம் அபேக்ஷிக்கப்படுகின்றது. வியவகார யோக்ய மெனின், இஃது இருக்கின்றதே. பர மார்த்த சத்திய மெனின், எங்ஙன மிங்ஙன மாகின்றது; ஏகத் தன்மையே வேதாந்த தாத்பர்ய மாகலின். அவ் விடத்தின்கண்ணே பல சம்பந்த மாகலின்.

சர்வ பேதமும் பிரதிபந்ந உபாதியில், "ஈதன்று ஈதன்று" என்னும் வாக்கியத்தால் நிஷேதிக்கப்படுதலான், மித்யாத் தன்மை சித்தித்தலின். வேதத்தின்கண்ணேயே வாம தேவாதிகளின் ஞானம் கேட்கப்படுகின்ற தெனின், சத்தியம்; அது ஜீவ பேதத்தைப் பிரதிபாதிக்காமையின்.



கேட்கப்பட்ட அர்த்தம் பொருந்தாமையாற் கற்பிக்கப்படு கின்ற தெனின், அற் றன்று; நிச்சயிக்கப்பட்ட அர்த்த முடைய ஜீவ ஐக்யப் பிரதிபாதக வேறு வாக்யத்தோடு விரோ தித்தலாற் கற்பனை பொருந்தாமையின். ஏக ஜீவ பக்ஷத்தில் ஒருவனது முத்தியினால் சர்வ முத்திப் பிரசங்க மெனின், அற் றன்று; ஏகத்வ வாதியைக் குறித்துச் சர்வத் தன்மை நிரூபித்தற்கு அசக்ய மாகலின். அங்ஙன மாயினும், அநேக ஜீவர்கள் அநுபவ சித்த மெனின்; ஆயின், ஸ்வப் நம் போன்று வியவஸ்தை யிருக்கக.

அற்றேல், எங்ஙனம்? ஸ்வப்நத்தில் பரமார்த்த சத்ய னாய ஒரே ஸ்வப்ந திருஷ்டா. அவனது பிராந்தியாற் கற்பிக் கப்பட்ட அந்ய சர்வ ஜீவர்களும், இங்ஙனம் ஜாக்ரத்தின் கண்ணும் ஒருவனே பரமார்த்த சத்யன், அந்ய எல்லா ஜீவர் களும் கற்பிதம். ஆகவே, அநேகர்களின் மத்தியில் இந்த ஒருவன் யாவ னென நிச்சய மின்மையின், சிரவணாதியில் யாவன் பிரவிர்த்திப்பான்? எனச் சாதந அநுஷ்டாந மின் மையின், மோக்ஷ மின்மைப் பிரசங்க மெனின், சத்தியம். தேஹாத்ம வாதத்தை யாசிரயித்துத் பிராந்தனா யிருக்கின் றாய். எங்ஙனம் எனின், கேட்பாயாக. ஸ்வப்நத்தில் அந்நிய ஜீவர்கள் கற்பிதம் என்பதன் பொருள் யாது? தேவ கந்தர்வாதி பெயரை யுடைய தேகங்கள் கற்பிதங்களா? அல்லது, அஞ்ஞாந உபாதியை யுடைய எந்த ஜீவன் நம தங்கீகாரம், அவ்விதமே அநேகர்களநுபவிக்கப்படுகின்றனர். அவர்களுள் ஒருவன் சத்தியன், அந்நியர்கள் கற்பிதர்களா? முதல தன்று; தேஹங்கட்குக் கற்பிதத் தன்மையினும் விரோத மின்மையின், தேஹத்தை, அல்லது, தேஹாவச் சிந்நத்தைச் சிரவணாதி அதிகாரியாகக் கூறுவ தின்று;

எதனால் விநிகம மின்மை தோஷ மாகின்றது. இரண்டாவ
தன்று; அஞ்ஞானாவச்சிந்நத்திற்கு ஸ்வப்நத்திற் பேதாநு
பவ மின்மையின், அந்நிய அஞ்ஞானாவச்சிந்நம் அந்நியனுக்
குப் பிரத்யக்ஷ மாவதற்கு யோக்கிய மாவ தின்று. அங்ஙன
மாயினும் அவ் வத் தேஹ சேஷ்டையா லநுமிக்கப்படுகின்ற
தெனின், அற் றன்று; ஒருவனுனும் அநேக தேஹ
சேஷ்டை பொருந்துதலின், நையாயிகர்கட்கு காய வியூஹ
தசையில் யோகி தேஹம் போன்று. அது போன்றே அநு
ஸந்தாநம் வரு மெனின், சத்தியம்; அவித்தியாச்சிந்நத்தைக்
குறித்து இஷ்ட மாகலின். அவ் வத் தேஹாவச்சிந்நத்தைக்
குறித்து அவ் விடத்தும் இன்மையின். ஆத்மா மாத்ரம்
அநுஸந்தாநஞ் செய்தலின். இதனானே ஒரே சரீரத்தி
னிடத்தும் பாதாவச்சிந்நன், சிரோவச்சிந்ந துக்கத்தை அநு
ஸந்தாநஞ் செய்வ தின்று; "பாதத்தில் எனக்குச் சுகம்
சிரசில் எனக்குத் துக்கம்" என்னும் அநுபவத்தால்.

ஆகவே, தேஹாத்மப் பிராந்தியை ஆசிரயித்தே ஜீவ
பேத அநுபவ மென ஸ்திர மாம். அங்ஙன மாயினும்,
இவ் விடத்து எங்ஙனம்? அநுபவ மெனின், சாவதாநத்
தாற் கேட்கத் தக்கது. நித்திய சுத்த புத்த முக்த ஸ்வபா
வத்தை யுடைய, உபநிஷத் ஒன்றானே அறியப்படும் வஸ்து
ஒன்றே உண்மையாக விருக்கின்றது; அஃதே அஞ்ஞா
நத்தை ஆசிரயித்து ஜீவ பாவத்தை அடைந்து தேவ திரியக்
மநுஷ்யாதி தேஹாதிகளைக் கற்பித்து, அதன் உபகாரணத்
தன்மையால் பிரஹ்மாண்டாதி சதுர்த் தச புவநங்களைச்
சிருஷ்டித்து, அவ் வத் தேஹங்களில் சில தேவன், சில
மநுஷ்யன், சில ஹிரண்ய கர்ப்பன் எல்லாரையும் சிருஷ்
டிப்பவன், பாலிக்கும் சில விஷ்ணு, சில அந்நியன் சர்வ



சம்ஹார கர்த்தா ருத்திரன் பிரளயத்தில், அவர்கட்குச்
சத்துவாதி குணங்கள் உபாதிகள், அவற்றின் வசத்தால்
அவர்கட்குச் சர்வ சாமர்த்தியம், நான் மீண்டும் சில பிராஹ்
மண குமாரன், அவர்களின் பக்தியைப் பூஜா நமஸ்காராதி
யினு லநுஷ்டித்து, சிரவணுதி சாதநத்தைச் சம்பாதித்து,
மோக்ஷத்தைச் சாதிக்க இச்சிக்கின்றேன் என்று ஈசுவரனு
யிருந்தும் ஜாக்ரத்திற் பிராந்த னுகின்றான்.

மீண்டு புகன்ற ஜாக்ரப் பிரபஞ்சத்தைச் சம்ஹாரஞ்
செய்து, ஸ்வப்நத்தில் நித்திரா தோஷத்தோடு கூடியவன்,
அவ் விதப் பிரபஞ்சத்தையே கற்பித்து, அவ் வத் தேஹேந்
திரியாதி சாத்திய போகத்தைப் பூஜித்து, வசிஷ்டாதிகள்
முக்தர்கள், அந்நியர்கள் பத்தர்கள், நானும் பத்தன், துக்கி
சம்சாரி முக்த னுவேன் என்றும் கற்பித்து, மீண்டும் அவ்
வவஸ்தையைச் சம்ஹாரஞ் செய்து, சர்வ பிராந்தி நிவிர்த்தி
ரூப ஜாக்ரத்தை, அல்லது, சுழுப்தியை அடைகின்றான்.
இங்ஙன மிருக்குங்கால், பரிபூர்ண ஸ்வயம் பிரகாச ஆநந்த
ஏக ஸ்வபாவ ஒரே ஆத்மா, தன தஞ்ஞாந வசத்தால் ஜீவன்
சம்சாரி என்பதாதி சப்தங்களாற் கூறுதற்கு யோக்கிய
னுகின்றான். அவனி னின்றும் அந்நிய சில சம்சாரி சம்பா
வனை செய்தற்கும் சமர்த்த மன்று என்று நிலைபெற்ற தாம்.
அநாதி சம்சாரத்திற் சம்பாதித்த புண்ணிய சமூகத்தாற்
கல்மஷ மின்றி வைராக்கியாதி சம்பந்நனுய், சாஸ்திராசாரி
யாதிப் பிரசாதத்தால் கொடுக்கப்பட்ட ஆதர நைரந்த்ர்ய
தீர்க்க காலஞ் சேவிக்கப்பட்ட சிரவணுதி சாதந படுத்
தன்மை யுடைய அவனுக்கே, எப் பொழுது தத் த்வ மசி
யாதி வாக்கியத்தி னின்று முண்டாய ஆத்ம சாக்ஷாத்காரம்
உதய மாகின்றதோ, அப் பொழுது அஞ்ஞாந அதன் காரி

யம் எல்லாம் உபசம்ஹாரஞ் செய்து, தன தாநந்தத்திற் றிருப்தனுப்த் தனது மஹிமையி லிருப்பவன் முக்தன் என்னும் வியவஹாரத்திற்கு யோக்கிய னுகின்ருன். அந்த அவஸ்தையில், அவனி னின்றும் அந்நிய சில சம்சாரி, அல்லது, அவனுல் அநுபவிக்கப்படாத த்வைதம் அற்பமுமின்று என்பது ரஹஸ்ய மாம்.

10. அஞ்ஞாத சத்தை இஷ்ட மல்ல வெனின், வியவஹார மெங்ஙன முண்டாம்? அதர்சந மாத்திரத்தால் நாச நிச்சயத்தால் அழுவ தின்று.

அற்றேல், அவனுல் அநுபவிக்கப்படாத த்வைதம் இன்று என்று எங்ஙனம் கூறப்படுகின்றது; எது வரை அஞ்ஞாத த்வைதத்திற்கும் சத்துத் தன்மை அங்கீகரிக்கின்றீர்கள்?

இதனுனே, விருத்தர்கள் மூவித சத்தையை அங்கீகரிக்கின்றனர்; அஞ்ஞாத சத்தை அங்கீகரிக்கா விடத்து அது பொருந்துவ தின்று; பிராதீதிக பாரமார்த்திக பேதத்தால் இரண்டு பிரகாரமே பொருந்துதலின். கொள்ளாக்கால், கிரகத்தி னின்றும் போய்ப் பசுவாதி சகல சாதந சமூகத்தைப் பார்க்காமல், அவற்றின் அபாவ நிச்சயத்தால், சோக அக்கினியினுல் தஹிக்கப்படுபவனுக்கு அழுதலால் மரணம் வரும்.

அற்றேல், ஸ்வப்நம் போன்று ஜாக்ரத்திலும் பிராதீதிக சத்வ சம்பந்த த்வைதத்தானே வியவஹாரம் என் பொருந்தா தெனின், அற் றன்று; விஷமத் தன்மையான், ஜாக்ர ஞாநத்தால் அதன் பாத மாதலின். ஈண்டோ சாக்ஷாத்காரத்திற்குப் பூர்வம் அஃதின்மையின். இவ் விடத்துக் கூறுகின்ருர்.



11. மூவித சத்தையைக் கூறும் வாதியை என்னுல் இப்போழ்து வினவப்படுகின்றது. த்வைதம் சத்தியமா? அசத்தியமா? (முதலது) அன்று. (இரண்டாவது) அசத்தியத்தில் மூ விதம் யாங்ஙனம்?

த்வைதத்திற்குப் பாரமார்த்திகத்தை ஆசிரயித்து அஞ்ஞாத சத்துத் தன்மை சாதிக்கப்படுகினறதா? அல்லது அநிர்வசநீயமா? முதல தன்று, பிரத்தியக்ஷாதிப் பிராமாண்ய நிராசத்தானே கண்டிக்கப்பட்டிருத்தலின். இரண்டாவதன் கண், அநிர்வசநீயம் முதற்கண் ஓரிடத்திற் சித்தமா? அன்று? அன் றெனின், திருஷ்டாந்த மின்மையின் ஆகாசாதிகட்கு அநிர்வசநீயத் தன்மை எங்ஙனம் சாதிக்கத் தக்கது. ரஜ்ஜு சர்ப்பாதிகள் சித்தம் எனின்; ஆயின், ஆண்டு எவ்வித சத்துவம், அவ்வித சத்துவமே ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கும் என ஸ்தித மாகுங்கால், அஞ்ஞாத சத்வம் யாது? பிராதீதிக சத்வம யாது? எனப் பகுக்கத் தக்கது. அஞ்ஞாத சத்வமும் ஆகாசாதிக்குக் கற்பிக்கப்படு மாயின், அப்பொழுது இத் திருஷ்டாந்தம் தார்ஷ்டாந்திகத்தில் சாமஞ்ஜயத்தான் எங்ஙனம் உபசம்ஹாரஞ் செய்யப்படுகின்றது?; விரோத மிருத்தலின். கிரஹத்தினின்றும் வெளிச் சென்றவனுக்கு அசத்துவ நிச்சயத்தால் அழுத லாதி தோஷப் பிரசங்க மன்று; பாதகப் பிரமாணம் பிரவிருத்தியாமையின். அபாவ நிச்சயம் அங்கீகரியாமையானும், ஸ்வப்நம் போன்று சர்வ வியவஹாரமும் உபபாதிக்கப்பட்டமையானும். ஆண்டுப் பாத முள தெனக் கூறற்க; வைஷம்யம் (இருத்தலின்) பிராந்தி யவஸ்தையில் ஓரிடத்தும் பாதம் அங்கீகரியாமையின். பிரமாணப் பிரவிருத்தியிற் பாத மாயினும்

ஒரு தோஷமு மின்று, அப்பொழுது பிராந்தியாற் சித்தித்தித்தலான் வியவஹாரம் அங்கீகரியாமையின். மூவித சத்வ அங்கீகார விரோத மின்று; சர்வ த்வைதத்திற்கும் பிராதிதிக சத்துவத்தைப் பரித்தியாகஞ் செய்யாது அவர்களால் பிராந்தனைச் சந்தோஷஞ் செய்யப்பட்டிருத்தலின். பிராதிதிக சத்துத் தன்மைக்கண்ணும் பிரபஞ்சத்திற்கு பிராந்த புத்தி சித்தியின்கண் அவாந்தர வைஷம்யத்தை ஆசிரயித்து வியாவகாரிக சத்துவக் கூற்று முரணுமையின்.

12. ஒவ்வொரு ஞாநத்தைக் குறித்துத் த்வைத பேதத்தில் எங்ஙனம் பிரத்தியபிஞ்ஞை கூறுக. பதின்மருக்கு ஏக காலத்திற் சர்ப்பப் பிராந்தியிற் போன்று அஃதுமாம்.

அங்ஙன மாயினும், அஞ்ஞாத சத்தை அங்கீகரியாவிடின் ஸ்வப்நத்தினின்றும் விழித்தவனுக்கு, "அஃதே இப்பிரபஞ்சம்" என்னும் பிரத்தியபிஞ்ஞையின்கண் கதி என்னை எனின்; மந்தாந்தகாரத்தி லிருக்கும் ஒரு இரஜ்ஜுவின்கண்ணே ஏக காலத்தில் சர்ப்பப் பிராந்தியால் ஓடும் பதின்மருக்குப் பரஸ்பரம் சம்வாதத்கால் 'ஒரு சர்ப்பமே எல்லோராலும் அநுபவிக்கப்பட்டது' என்னும் பிரத்தியபிஞ்ஞையில் யாதோ, அதுவேயெனச் சந்தோஷிக்க. ஆண்டுத் தன் தன் பிராந்தியாற் சித்தித்த விஷயமானது எல்லோராலும் பிருதக் பிருதக்கே அநுபவிக்கப்படுகின்றது; அந்நியப் பிராந்தியாற் சித்தித்ததை அந்நியரால் அறிதற்கு அசக்கியமாகலின். அந்நியப் பிராந்தி யறியாமையின். 'ஒரு சர்ப்பமே எல்லோராலும் அநுபவிக்கப்படுகின்றது' என்று



ஆண்டு அவிவேகத்தானே பிரத்தியபிஞ்ஞை உண்டாகின்றது. இங்ஙனம் ஜாக்ராவஸ்தையிற் பிரபஞ்சத்தை அநுபவித்துச் சுழுத்தியை யடைந்து மீண்டும் எழுந்து, எவ் இப்பிரபஞ்சாநுபவமோ, அது வேறு பிரபஞ்சத்தையே விஷயஞ் செய்கின்றது. பிரத்தியபிஞ்ஞையோ அவிவேகத்தானே யாம். சுழுத்தியிற் பிரபஞ்ச விலயத்திற் பிரமாண அபாவ மின்று; "திருஷடாவின் திருஷ்டிக்கு விபரிலோப மின்று, அவிநாசி யாகலின். அக்கால் த்விதீய மின்று. அதனினின்று வேறு பிரிவாய வெதைப் பார்ப்பான்" என்று சுழுத்தியில் த்வைத அபாவத்தைக் கூறும் சுருதியால், ஆண்டுச் சர்வப் பிரபஞ்ச அபாவம் காண்பிக்கப்பட்டிருத்தலின்.

13. ஜகத் போதத்தின்கண் சர்ப்பப் பிராந்தியினின்றும் விசேஷ மிருக்கின்றது. கொள்ளக்கால் இந்திரியாதிக்கு உபாதாநம் யாங்ஙனம்? அஃதில்லாக்கால் எதனால் புத்தியின்று.

அங்ஙன மாயினும், ரஜ்ஜு சர்ப்ப ஞாநத்தினின்றும் ஆகாசாதிப் பிரபஞ்ச ஞாநத்தில் பிரத்தியக்ஷாதிப் பிரமாண அவித்தியா காரணகத்துவ பாவ அபாவங்களால் கிஞ்சிற்று விசேஷ மிருக்கின்றது. எவ்வித அர்த்தத்தை இந்திரியாதி ஜந்ய ஞாநம் விஷயஞ் செய்கின்றதோ, அவ்விதமே அவித்தியா ஜந்யப் பிராந்தியும் விஷயஞ் செய்கின்ற தென்பது பொருத்த முடைத் தன்றாம்; பிராந்திக்குப் பூர்வம் விஷயங்க ளின்மையின். இந்திரியாதி ஜந்ய ஞாநத்திற்கும் சந்நிகர்ஷாதி ஜந்யத் தன்மையால், ஞாநத்திற்குப் பூர்வம் விஷய

சத்தை அவசியமாகலின், அந்வய வியதிரேகங்களாலும் இந்திரியாதிகட்குக் காரணத் தன்மை சித்த மாகலின்.

ஆகலின் பிரபஞ்சத்திற்கு அஞ்ஞாத சத்தை அங்கீகாரம் அவசியஞ் செய்யற்பாலதாம். அன்றாயின், விலக்ஷணத் தன்மை பொருந்தாமையின், அற் றன்று;

14. (பிரபஞ்ச ஞானத்தைக் குறித்து) இந்திரியங்கட்குக் காரணத்துவத்தின்கண் அப்பொழுது உன்னிடத்திற் கேள்வி யுண்டாம். எங்ஙனம் ஸ்வப்நப் பிராந்தியில் அவற்றிற்கு அந்வய வியதிரேக புத்தி.

இந்திரியாதிகட்கு உண்மையாகப் பிரபஞ்ச ஞானத்தைக் குறித்து அகாரண மாகலின், எங்ஙன மெனின். ஆண்டுக் கூறுக. இந்திரியாதிகட்குப் பிரமிதி மாத்திரத்தில் காரணத் தன்மையா? பிராந்திப் பிரமை சாதாரண ஞான மாத்திரத்தின்கண்ணா? பிராந்தி மாத்திரத்தின்கண்ணா?; முதல தன்று; இந்திரியாதி ஜந்ய ஞானப் பிராமாண்யமானது பிராந்தி விஷய வியாவிருத்த அர்த்த விஷயத் தன்மையாற் சாதிக்கத் தக்கது. பிராந்தி விஷய வியாவிருத்த அர்த்த விஷயத தன்மையும் பிரமிதி விஷயத் தன்மையான் என அந்யோந்யாசிரய மாகலின். பிரமிதி விஷயத் தன்மை அர்த்தத்தின் சத்தியத் தன்மையின்கண் ஏதுவு மன்று, 'மித்தை இதம் ரஜதம்' என்னும் பிரமிதியால் அசத்தியமும் விஷய மாகுதலின். அபாதிதத் தன்மையும் சித்தியாமையின். மற்றும், இந்திரியங்கட்குப் பிரமாணத் தன்மையால் அஞ்ஞாதார்த்த விஷயத் தன்மை கூற வேண்டுமிடத்து அதிஷ்டான மாத்ர விஷயத் தன்மைப் பிராப்தம். சர்வப் பிர



பஞ்சத்திற்கும் ஜடத் தன்மையால் அஞ்ஞாதத் தன்மையின்மையின்.

ஆகவே அதிஷ்டானத் தன்மை ஆத்மாவினிடத்தே விசிராந்த மாகலின். இந்திரியங்களாய பிரமாணங்கள் பிரத்தியகாத்ம விஷயங்க ளெனக் கூற வேண்டும். அதுவும் பொருத்த மன்று; பிரத்தியகாத்மா இந்திரிய விஷய மன்றாகலின். அதற்கு நிர்த் தர்மகத் தன்மை யிருந்தலின். அங்ஙனமே, "திருசியாய ஆத்மாவிற்கு ரூபம் இன்று. ஒருவரும் இதை சக்ஷுவாற் பார்ப்ப தின்று. ஈசுவரன் இந்திரியங்களை வெளி விஷயங்களில் ஹிம்சித்தார். (வெளி விஷயங்களைப் பார்க்கும்படி நியமித்தார்.) அதனால் பராக் விஷயங்களைப் பார்க்கின்றன. அந்த ராத்மாவை யன்று." என்னும் சுருதி யுமாம்.

இச் சுருதியானே இந்திரியங்கட்குப் பிரபஞ்ச விஷயத் தன்மை காட்டப்பட்டது எனக் கூறற்க; ஸ்வப்ந இந்திரியம் போன்று அந்வய வியதிரேகப் பிராந்தி சித்தப் பிரபஞ்ச ஞான காரணத்வ அநுவாதத்தால் ஆத்மாவிற்கு இந்திரிய அவிஷயத் தன்மைப் பிரதர்சநத்திற் றாற்பரிய மாகலின். இதனால் பிராந்திப் பிரமா சாதாரண ஞான காரணத் தன்மையும் கண்டிக்கப்பட்டது; பிரமா காரணத் தன்மை நிருபணஞ் செய்தற் கசக்கிய மாகலின்.

ஆயின், இந்திரியங்கட்குப் பிராந்தி மாத்திரத்திற் காரணத் தன்மை இருக்க. அற் றன்று; அவித்தியா மாத்திர காரண பிராந்தி ஞானம் உன்னானே புகலப்பட்டிருத்தலின். ஞானத்தைக் குறித்து இந்திரிய அந்வய வியதிரேகங்கட்கும்

ஸ்வப்ந இந்திரிய அந்வய வியதிரேகம் போன்று பொருந்து தலின். இங்ஙனம் கடாதி காரிய மாத்ரத்திற் காரண ஆகாங்க்ஷையில் காரணத் தன்மையாக அவித்தையே முடிவு செய்க. அவ் வவ் வர்த்தேச்சை யுடையவர்கட்கு அவ் வக் காரண விசேஷ உபாதாநமோ அங்ஙனமே ஸ்வப்நம் போலப் பொருத்துக. அதனல் பிரஹ்மத்தி னின்றும் அதிர்க்த சர்வ கார்ய சமூக ஞாந ஞேய ரூப அவ் வெல்லாம் அவித்தையா லாக்கப்பட்டனவே. ஆகலின் எல்லாவற்றிற் கும் பிராதீதிகமே சத்துவ மென்பது சித்தமாம். அது வசிஷ்டரால், "இச் சர்வ் பாவ பதார்த்தங்களும் அவித் தையை யோநியாக வுடையனவே. புத்புதம் போன்று, க்ஷணத்தில் ஜநித்து, ஞாநப் பிரதாந சமுத்திரத்தில் லயத்தை யடைகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது.

15. கடத்தைக் குறித்து மண் முதலியவற்றிற்குக் காரணத் தன்மை இஷ்ட மன்ரு மாயின். பிரமை யின்றி அவித்தைக்குக் காரணத் தன்மை எங்ஙனஞ் சித்தமாம்.

அற்றேல் பாவ பதார்த்தங்கட்கு அவித்தையா கார ணத் தன்மை, காரியா காரணத் தன்மையை அங்கிகரித்தா? அன்ரு? அன்ருயின், அவித்தியா காரணத் தன்மை எங்ஙன மாம். இருக்கின்ற தெனின், அப்பொழுது காரிய காரண பாவம் எங்ஙனம் எங்ஙனம் அந்வய வ்யதிரேகாதிகள் அவைகளே பிரமாணமாம். ஆண்டு வேறு பிரகாரம் பொ ருந்தாமையின். ஆகவே அந்வய வ்யதிரேகாதி சித்தமாய மண் முதலிய காரணத் தன்மையை விட்டு அவித்தியா கார ணத் தன்மை யபிமாநம் அநுசிதமேயாம்.



மற்றும், பாவ பதார்த்தங்கட்கு அவித்திய காரணத் தன்மையைப் புகல்பவனைக் கேட்க. வேறு அபேக்ஷை யின்றி அவித்தையே காரணமா? அல்லது, அதிருஷ்ட ஈசுவர கார ணாந்தர அபேக்ஷை யுடையதா? முதல தன்று. காரண வைசித்திரிய மின்மையின், காரிய வைசித்திரியம் பொருந்தா தாகலானும், சேதந அதிஷ்டாந மின்றி ஜட சக்திக்குக் காரியத்தைச் செய்யும் தன்மை பொருந்தாமையானும் (என அறிக)

இரண்டாவ தன்று. அவித்தியா காரண வாதியாலும் அதிருஷ்ட ஈசுவராதி காரணத் தன்மை அவசியம் கூற வேண்டுதலின். கொய்திற் கோடலான். அதனுனே வைசித் திரிய காரியம் பொருந்துதலின். கற்பிதமாகிய அஞ்ஞாந காரணத்வ அபிமாநத்தால் வியர்த்தமாம்.

ஆகவே பிரத்யக்ஷாதி லௌகிகப் பிரமாணத்திற்கும், புத்திர பசு ஸ்வர்க்காதிகளைக் குறித்து யாகாதிகட்கு ஸாத நத் தன்மையைப் போதிக்கும் பூர்வ காண்டத்திற்கும் பிரா மாண்யம் ஸ்தாபிக்கப்பட்ட தாயிற்று. அல்லாக்கால், லோக வேத விருத்தமாய எப்பக்ஷங் கொள்ளப்படுகின்றது; ஆத லால், அவித்தையை மாத்திரம் காரணமாக வுடையது ஜகத்து என்பது நகைப்பு மாத்திரமாம்.

ஈண்டுக் கூறப்படுகின்றது.

16. ஸத்திற்கு உற்பத்தி யின்று. இங்ஙனமே அசத்திற்கும் உற்பத்தி யின்று. ஜந்யத் தன்மையே ஜந்யத் திற்கு மாயா மயத் தன்மையை அர்ப்பணஞ் செய்கின்றது.

இக் காரியம் சத்தா? அசத்தா? முதல தன்று. 'ஒன்றே அத்விதீயம்.' என்னும் அத்வைத மாத்ரத்தை சித்தஞ் செய்யுஞ் ஆகம விரோதத்தானும், பொருந்தாமையானுமாம்.

அங்ஙன மன்றே, உற்பத்திக்குப் பூர்வம் காரியம் சத்தா? அல்லது அசத்தா? அசத்தா மாயின், முயற்சோடும் காரண வியாபாரத்தா லுண்டாகுக, அசத்தத் தன்மை சமானமா யிருத்தலின். சத்தா மாயின், காரண வியாபாரத்தால் பிரயோஜநம் என்னே? முனனமே அது சத்தாகலானும், காரியத் தன்மை நஷ்ட மாகுதலானும்

வெளிப்படுதல் மாத்திரம் காரண வியாபாரத்தால் உண்டாகின்ற தெனின், அற் றன்று; ஆண்டும் ஸத்வ அஸத்வ விகற்பமாய முதலையினின்றும் பயம் நீங்காமையின். அங்ஙன மாயின், ஸதஸத் விலக்ஷண அநிர்வசநீயமாகவே காரிய மிருக்குக. அங்ஙன மாயின், காரிய அநுரூப அநாதி அநிர்வசநீய அஞ்ஞாநமே காரண மாதல் உசிதமாம். ஸத்தியத்திற்கு அஸத்திய காரணத் தன்மை பொருந்தாமையின், லோகத்தின்கண் அங்ஙனம் பார்க்கப்படுதலின். காரிய வைசித்திரியம் பொருந்தா தென்னற்க. விசித்திர சக்தியுடைய அஞ்ஞாநமே கற்பிக்கப் படுதலின் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பூர்வ காண்டத்திற்குப் பிராமண்யம் பொருந்தா தென்னற்க, அதற்கும் ஸாத்திய ஸாதந பாவ வாயிலாய், அல்லது ஸத்வ சுத்தி வாயிலாய், அல்லது பிரவிர்த்தி வாயிலாய்ப் பிரஹ்மத்தின்கண்ணே தாத்பர்ய மிருத்தலின். தாத்பர்ய அர்த்தத்தின்கண் சப்தத்திற்குப் பிரா



மாண்ய மாகலின். ஆதலால், பாவ பதார்த்தங்கட்கு அவித்தியா காரணத் தன்மை நன்கு புகலப்பட்டது. இதனல் அவித்தையாற் சற்பிக்கப்பட்ட ஜகத்திற்குப் பிரதீதி ஸம கால முடைய ஸத்வமே உசிதமாம். இரஜ்ஜு சர்ப்பம், சுத்தி இரஜதம், கந்தர்வ நகரம், ஸ்வப்நப் பிரபஞ்சங்களில் அங்ஙனம் பார்க்கப்படுதலின்.

ஈண்டு இது நிருபிக்கத் தக்கது.

17. பிரதீதி மாத்திரம் ஸத்வ மாயின், பிராதிபாஸிக சத்தை உனக்கு அங்கிகாரமாம். விரோத மின்மையின். நமக்கும் அதுவே கோட்பாடாம். ஆயின், பேதத்தில் பிரமை யாது? புகல்வாயாக.

ஜகத்திற்குப் பிரதீதி ஸம கால முடைய ஸத்வம் என்பதன் பொருள் யாது? பிரதீதியே ஸத்வமா? அல்லது, பிரதீதிக்கு அந்யமாய் ஜகத்திற்கு வேறு ஸத்வம் இருக்கின்றதா? வேறு ஸத்வ மிருக்கின்ற தெனின், அதன்கண் பிரமாணம் உண்டா? இன்றே? இருக்கின்ற தெனின், ஆண்டுப் பிரத்யக்ஷமா? அநுமாநமா. ஆகமமா? அர்த்தாபத்தியா? பிரத்தியக்ஷ மெனின், ஆண்டு 'இது கடம்' என்னும் எப்பிரத்தியக்ஷம் இதுவே தன்னினின்றும் கட பேதத்தை விஷயஞ் செய்கின்றதா? வேறு பிரத்தியக்ஷமா? பிரத்தியக்ஷம் ஸ்வயமே தனது விஷய பேதத்தைக் கிரகிக்கின்ற தெனின், அது ஸ்வப்ரகாசமா? அல்லது பரப்பிரகாசமா? அவற்றுள், முதலதன்கண், தனது விஷய விசேஷணத் தன்மையால் பேதம் பாந மாயினும், விசிஷ்ட ஞாநம் விசேஷண ஞாந ஜந்யத்வ பக்ஷத்தில், தனது பேத லக்ஷண விசேஷண விஷ

யத்தானே தான் உற்பத்தியாகின்றதென்பது பிராப்தமாம். ஆகவே ஆத்மாசிரயமாம்.

விசேஷ்யத் தன்மையாகப் பேதம் விளங்கி, விசேஷண விசேஷிய மிரண்டின் இந்திரிய ஸங்கிர்ஷ மாத்திரம் விசிஷ்ட ஞானத்தின்கண் காரண மென்னும் பக்ஷத்தில், ஞானோத்பத்திக்குப் பூர்வம் பேத மிருக்கின்றதென்று கூற வேண்டும். ஆகவே அந்த ஞானத்திற்கே அப் பேதம் எங்ஙனம் விஷயமாம். தன துற்பத்திக்குப் பூர்வம் தானே இன்மையின்.

வேறு ஞானத்திற்கும் ஸ்வயம்பிரகாச ஞானத்திற்கு விஷய மின்மையான், அதனைப் பிரதியோகியாக வுடைய பேதம் விஷய மன்றாகலின். இப்பொழுது இன்றிய ஞானத்திற்கு பரப்பிரகாசத் தன்மையில் வர்த்தமாந கால உபாதியை யுடையது ஸ்வப்ரகாசத் தன்மை என்றும். வர்த்தமாந காலத்தில் ஞாந ஸ்வரூபமே ஸ்வப்பிரகாசம் எனின், அற் றன்று. சென்ற வரப்போகின்ற ஞானத்தின் கண்ணும் அத்தன்மை பிராப் தியாகலின்· கடம் ஒரு காலத் தும் கட மல்ல என்ப தன்று.

இந்திரிய ஸங்கிர்ஷாசிரய பேதம் தனது சத்தை மாத்திரத்தால் தன்னை விஷயமாக வுடைய ஞானத்தினை உண்டாக்குகின்றது என்பதும் பிரக்கிரியை மாத்திரமாம். பிரமாண மின்மையால் சத்தை மாத்திரமும் சித்தியாமையின். பரப்பிரகாச ஞாந பக்ஷத்தில், வேறு பிரத்தியக்ஷத் தால் ஞானத்தினின்றும் ஞேயத்திற்குப் பேதக் கிரஹம் இருக்குக.



அதுவும் வியாவிர்த்தப் பிரதியோகியாதி கிரக பூர்வகமா? அன்றா? என விசாரிக்கத் தக்கது.

அன்றாயின், பேதத்தினை விஷயஞ் செய்வது யாங்ஙனம்? நிர்த்தரும பேதத்தை, பிரதியோகி யின்றிய பேதத்தை, ஒருவரு மறிவ தின்று. "இது இதனின்றும் பிந்நம்" என்னும் அநுபவத்தால். வியாவிர்த்தப் பிரதியோகியாதி கிரக பூர்வகத்தின்கண்ணே, வியாவிர்த்தியைக் கிரகிக்கும் வேறு பிரத்தியக்ஷத்தினைத் தேடுதலில் அநவஸ்தையாம். அதனானேயே வியாவிர்த்தியைக் கிரஹிப்பதன்கண் ஆத்மாசிரயமாம். ஆதலால், வஸ்து மாத்திரத்தினைக் கிரஹிக்கும் பிரத்தியக்ஷம், பேத வார்த்தையினை அறிவதே யின்று என்பது சித்தமாம்.

ஆயின், அநுமாநத்தால் ஞாந ஞேயங்களின் பேதம் கிரஹிக்க. அங்ஙன மன்றே, விவாதத்திற் கிடமாய விஷயம், தனது விஷய ஞானத்தினின்றும் பேதத்தினை யடைகின்றது. அதன் விருத்த தர்ம ஆசிரய மாகலின், எது எதன் விருத்த தர்ம ஆசிரயமோ, அது அதனின்றும் பேதத்தினை யடைகின்றது. எங்ஙனம் கடத்தினின்றும் படம். ஆகவே இஃதாம். ஆதலின் அங்ஙனமாம்.

அற் றன்று. விரோதம் பேதத்தால் நிரூபிக்கப்பட வேண்டு மாகலின், பேதம் சித்தியாமையின். விரோதம் சித்தியாகா திருக்குங்கால், அதன் விருத்த தர்ம ஆசிரயத் தன்மையும் அசித்த மாகலின். ஸாத்தியப் பிரஸித்தி யின்மையின் வியாப்தி அசித்தி யாகலானும். கட படங்களின் பேதம் எப் பிரமாணத்தானும் சித்தி யின்றும். எதனால்

ஸாத்தியம் பிரஸித்தியாம். பிரத்தியக்ஷ அபாவத்தில் வேறு அநுமான மநுஸரிக்கினும் அநவஸ்தாதி தோஷம் அப்பொழுது போலவே ஆம்.

அபேத மாத்திரத்தில் தாத்பரியமான முடிவினை யுடைய ஆகமத்திற்குப் பேத போதகத் தன்மையை ஸங்கித்தற்கும் ஸமர்த் தன்ரும். அற்றேல், பிரஹ்மத்தினின்றும் ஸிருஷ்டியினைப் பிரதிபாதிக்கும் ஆகமம் காரிய ஸமூகத்திற்கு அதனினின்றும் பேதத்தினையும் பிரதிபாதிக்கின்றது. அபேதத்தில் அதனினின்றும் உத்பத்தியே யின்று மெனின், அற்றன்று; பிரதாநாதி பரமாக அந்யரால் கற்பிக்கப்படும் வேறு காரண நிராகரண பரமாய எல்லா ஸிருஷ்டி வாக்கியங்கட்கும், மட் கடாதிகளில் காரணத்தினின்றும் காரியத்திற்குப் பேதமாக நிரூபிக்கப்படாமை போன்று, பிரஹ்மமாகிய காரணத்தினின்றும் எல்லாக் காரிய ஸமூகத்திற்கும பேதமாக நிரூபிக்கப்படாமையின், அதவிதிய பிரஹ்ம ஸம்பாவனை மாததிபததில் தாத்பரிய மாகலின். கொள்ளாக்கால், பேத பரத்துவத்தில் அதன் நிஷேதம் அநர்த்தகமாம்.

மற்றும், ஸிருஷ்டி வாக்கியம் ஸாக்ஷாத் பேதத்தினைப் பிரதிபாதிப்ப தன்று. பேத வாசக பத மின்மையான், அபதார்த்தத்திற்கு வாக்கியார்த்தத் தன்மை யின்மையின். பதார்த்தத்திற்கு ஸம்ஸிருஷ்டத் தன்மையால், அல்லது தர்மி மாத்ர பரத் தன்மையால் வாக்கியம் பிரதிபாதிக்கப் படுவ தாகலின், கற்பனையின்கண் நிஷேத வாக்கியம் விரோதமாக எழும்பாமையான். ஞானமே தன்னினின்றும் அதிரிக்த



ஞேய மின்றிப் பொருந்தாது, தன்னின் பிந்நமாய ஞேயத்தினை விஷயஞ் செய்கின்றது. நிர்விஷய ஞாநம் பொருந்தாது. பார்க்கப்படுவது மில்லையாம். ஸவிஷயத்திற்கே விளக்க மாதலின். அல்லாக்கால் நிஷ்பிரகாரத் தன்மையே தோற்றுக. ஞாநத்தின்கண் விஷயத்தினின்றும் அந்யப் பிரகாரம் இன்மையி னென்னற்க; ஞேய மின்றி ஞாநம் பொருந்தாமை யின்மையின்.

அங்ஙன மன்றோ, ஞாநத்திற்கு ஞேய மின்றி உற்பத்தி பொருந்தாதா? ஸ்திதி பொருந்தாதா? ஞப்தி பொருந்தாதா? முதல தன்று. ஞாநம் ஸ்வரூபமாக உற்பத்தி யாகாமையின். அல்லது இருக்கினும் பிரமாண அதன் ஆபாசங்களானே அதன் உற்பத்தி ஸம்பவிக்குமிடத்து விஷயம் அபேக்ஷிக்கப்படாமையின். ஞாநத்திற்கு யாண்டும் விஷய ஜந்யத் தன்மையில் நியம மின்மையின்.

ஸ்திதி பொருந்தாமை யின்று; விஷயம் ஞாநத்தை ஆசிரயிக்காமையின்; அல்லது அங்ஙன மாயின் விஷயத் தன்மை வியாகாத மாகலின். ஞாநத்தை விஷயமாக வுடைய ஞாநத்திற்கு, விஷய ஞாந ஆதீநத் தன்மையால் ஞேய மின்றி ஞப்தி பொருந்தாமை யிருக்கின்ற தெனின், அற்றன்று. ஞாநம் ஸ்வயம்பிரகாச மாகலின் தனது வியவகாரத்தின் பொருட்டுத் தன்னின் அந்யத்தை அபேக்ஷியாமையின்; பரப் பிரகாசத் தன்மையால் வேறு ஞாநத்தை அபேக்ஷிக்கில் அதற்கும் அந்யத்தால் அதற்கும் அந்யத்தால் என, நிலைபே றின்மையின், ஞாநம் ஸித்தியாவிடத்து ஜகத்திற்கு ஆந்திய (குருட்டுத் தன்மை)ப் பிரஸங்கம் வரும்.

அறியப்படாத ஞாநத்திற்கே தனது விஷயத்தினைச் சாதிக்கும் தன்மையில், பிரமாண மின்மையால், நர சிருங்க

(மருடக் கொம்பு) ஸமாநத்திற்கு ஸ்வரூப சத்தை சித்தியா மையின்.

அல்லது, ஞாநத்திற்குத் தன் ஞாநத்தின் பொருட்டு வேறு ஞாந அபேக்ஷை யிருக்குக. அங்ஙன மாயினும் விஷய அபேக்ஷை யாங்ஙனம். விஷய ஞாநத்திற்கே அபேக்ஷை யிருக்கையான். ஞாந ஸாமாந்யத்திற்கு அபேக்ஷை யில்லா விடத்து தனது விஷய வியாவிருத்த ஞாந அபேக்ஷையில் விஷய அபேக்ஷையும் அவசியம் பாவிக்கத் தக்கது என்னும் இது துச்சமாம். அந்யருக்குச் சித்தித்த ஜாதியாதி போன்று ஞாநம் ஸ்வயமே வியாவிருத்த மாகலின்.

அங்ஙன மாயினும், ஞாநம் ஞேயத்தால் வியாபித்த தாகலின் ஞேயத்தினைப் போதிக்கின்ற தெனின், அற்றன்று. வியாப்தி ஸித்தியாமையின். ஞாந ஞேயங்கள் பிந்ந தேசத் திருத்தலால் ஸாமாநாதிகரண்ய மின்மையின். சென்ற, வருகின்ற அர்த்த ஞாந தர்சநத்தால் ஏக காலத் தன்மையும் சித்தியாமையின். ஆதலால்,

18. ஞேய ஞாநங்களின் பேதப் பிரமாணிகம் யாங்ஙனம்? இச் சராசரமாய விசுவம் ஞாந மாத்ரமாகவே விளங்குகின்றது.

19. ஞாந ஞேய பேதமாக ஸ்வப்நம் எங்ஙனம் தோற்றுகின்றதோ? அங்ஙனமே இச் சராசர ரூபமாகிய ஜாக்கிரம் விஞ்ஞாந மாத்திரமேயாம்.

20. தந்துக்கள் நீங்கிவிடில் படம் ஸ்வரூபமாக எங்ஙனம் சூந்யமாமோ? அங்ஙனமே இச் சராசர ஜகத்து ஆத்மாவின் பாந மாத்திரமாம்:



21. எங்ஙனம் பிராந்தன் திருஷ்டியால் இரஜ்ஜு சர்ப்ப ரூபமாக விளங்குகிறதோ? அங்ஙனமே மூட புத்தியால் ஆத்மா ஜகத் ரூபமாக விளங்குகின்றது.

22. ஆத்மாவின்கண்ணே ஸர்வ ஜகத்தும் திருஷ்டி மாத்ரமாகச் சதா வுண்டாய், ஸ்திதியை யடைந்து, நாள் தோறும் நாசத்தை யடைகின்றது.

23. பூர்ணாநந்த அத்வய ஸூத்த, பாபாதிகள் இன்றியதன்கண், பிரதிபிம்பம் போன்று முச் சகத்தும் திருஷ்டி மாத்ரமாக விளங்குகின்றது.

அது பகவாந் வஸிஷ்டரால், "அச் சித்து ரூப தர்ப்பணத்தில் இந்த ஸமஸ்த வஸ்து திருஷ்டிகளும் பிரதிபிம்பிக்கின்றன. தடாகத்தின்கண் கரையி லுள்ள விருக்ஷங்கள் போன்று. அங்ஙனமே எவனது சித்தமய லீலை இச் சராசர ஜகத்து, அவன் ஜகத்து ரூபமாயினும் ஒரு பிண்டத் தன்மை கண்டிக்கப்படுவதே யின்று" என்று கூறப்படுகின்றது.

இங்ஙனம் திருஷ்டி மாத்திர ஸ்வரூபம் ஜகத்து, ஆத்மாவை ஆசிரயித்து விஷயஞ் செய்யும் அஞ்ஞாநத்தால் செய்யப்பட்டது. இதனல் ஆத்மாவிற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை நன்கு விகற்பிக்கப்பட்டது. ஆகவே ஆத்மாவின்கண் லௌகிக வைதிகப் பிரமாணம் பொருந்தாமையான் ஸச விஷாணதி (முயற் கொம்பு) போன்று அசத்துத் தன்மைப் பிராப்தமாகுங்கால், அதன் ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டுச் சாஸ்திர அப்பியாஸம் யாங்ஙனம்? யுக்தியபேக்ஷை யாங்ஙனம்? என்பது ஸங்க்ஷேபமாம்.

இங்ஙனம் பிராப்தமாகுங்கால் கூறப்படுகின்றது:—

24. எந்தத் தத்துவம் வேத இரகசியம், பரம ஸூக்ஷ்மம், நித்திய முக்த ஸ்வபாவம், ஸத்தியம், ஸூக்ஷ்மத்திலும் ஸூக்ஷ்மம், பெரிது, இது அமிர்தம், முக்கர் ஒருவரானே யடையத்தக்கது. எதன் அம்சத்தில் இலேச மாத்திரமாக இச் சர்வ ஜகத்தும் பிராந்தி மாத்திரமாகத் தோற்றுகின்றதோ, பிரத்தியக் ஜோதி ஸ்வரூபமாய இச் சிவத்தை இப்பொழுது யுக்தியால் ஈண்டு கூறுகின்றேன்.

ஆண்டுப் பிரமாண மின்மையால் ஆத்மாவின் ஸ்வரூபாநுபபத்தியா? பிரதீதி (ஞாந) அநுபபத்தியா? முதலதன்று; ஆத்ம ஸ்வரூபம நித்திய மாகலின் வேறபேக்ஷை யின்மையானும், பிரமாணத்திற்குத் தனது பிரமேயத்தினை உற்பத்தி செய்யும் தன்மை யின்மையானும.

இரண்டாவதன்கண் பிரமாண மிருப்பினும் வேறு பிரமாணங் கூற வேண்டும். அத னபாவத்தில் நர சிருங்கம் போன்று அசத்துத் தன்மையான் தனது பிரமேய ஸாதகத் தன்மை ஸம்பவிக்காமையின்.

ஆகவே பிரமாணத்தின்கண் வேறு பிரமாணம் அநுஸரிக்கில் அநவஸ்தையால், "பிரமாணத்தானே வஸ்து ஸித்தி" என்பது அபிமாந மாத்திரமாம்.

(அற்றேல்) பிரமாணமானது வேறு பிரமாணத்தினபேக்ஷை யின்றியே, தன்னையும், தனது பிரமேயத்தினையும் சாதிக்கின்றது. ஸ்வப்பிரகாச ஸ்வபாவமாய அதற்கு, ஸ்வ, பர, வியவகாரத்தில் தீபப் பிரகாசம் போன்று வேறு பிரகாச அபேட்சை யின்மையால், "ஸர்வத்தையும் ஸாதிக்கும் பிரமாணம் தனது சித்தியின பொருட்டு அந்யத்தினையபேக்ஷிக்கின்றது." என்பது யுக்தி யுடைய தன்றாம்.



ஆயின், ஆச்சர்யம்; ஸர்வப் பிரமாண பிரமேய பேத பிந்ந ஜகத்திற்கு ஸாதகமாய ஆத்மா, தனது அதீந சித்தப் பிரமாணத்தால் எங்ஙனம் ஸித்தமாம். பிரமாணத்தினின்றும் பூர்வமே ஸித்தித் திருத்தலின்.

அல்லாக்கால், சித்த மின்றிய பிரமாதா வுடைய பிரமாணமே, ஆத்மாவை யடையாது, அல்லது, ஸர்வத்திற்கும் பிரமாதாவா யுள்ள ஆத்மாவினை பிரமாணம் எங்ஙனம் விஷயஞ் செய்யும்? கர்ம கர்த்ரு விரோதப் பிரஸங்கத்தால். அதனின் அந்யமாய எல்லாவற்றிற்கும் அநாத்மத் தன்மையால், பிரமாத்ருத் தன்மை யினமையின்.

ஆகவே, "ஹரே! (மைத்ரேயி') விஞ்ஞாதாவை எதனால் அறியத் தக்கது" என்னுஞ் சுருதியுமாம். ஆகவே, பிரமாதா வாய ஆத்மா ஸ்வயமே ஸித்தித்தலின் பிரமாண அபாவத்தால் அஸத்துவப் பிராப்தி யின்று.

மற்றும், ஆத்மாவின் அஸத்துத் தன்மையினை ஸம்பாதிக்கும் இது, பிரமாண ஸித்தமா? அசித்த ஸ்வபாவமா? ஸ்வயம் ஸித்தமா? முதலதன்கண், அஸத்துத் தன்மையைக் கிரஹிக்கும் பிரமாணத்திற்குப் பிரதியோகி விஷயத் தன்மை நியம மாகலின், ஆத்மாவுக்கும் பிரமாண ஸித்தத் தன்மையால், அஸத்துத் தன்மை பொருந்தாது.

இரண்டாவ தன்று; அசித்தம் ஸம்பாதித்தற்குப் பொருந்தாமையின். புத்தியின்கண் ஆரூட மின்றிய ஸ்வாப

வத்தை ஸம்பாதித்தற்கு ஸமர்த் தின்று. மூன்றாவதன் கண்ணே ஆத்மாவே ஸ்வயமாக ஸித்தித் திருக்கின்றது. அஸத்துத் தன்மையும் ஸ்வயமாக ஸித்தித்தல் பொருந்தாமையின்; கொள்ளாக்கால், ஆத்மாவிற்கு வேறு நாமம் செய்யும் பிரஸங்க மாகலின்.

மற்றம், ஆத்மாவின் அஸத்துத் தன்மை, ஆத்மாவினாலறியப்படுகின்றதா? அநாத்மாவினாலா? இரண்டாவ தன்று; அநாத்மாவிற்கு ஞாத்ருத் தன்மை யின்மையின். முதல தன்று; வியாகாத மாகலின்.

அங்ஙன மன்றோ, ஆத்மா தனது ஸத்தா காலத்தில், தனது அஸத்தையை யறிகின்றதா? தனது அஸத்தா காலத்திலா? முதலதன்கண் தனது ஸத்தா காலத்தில் தனது அஸத்தை யாங்ஙனம்? ஆகவே, விஷயமே யின்மையால், எதனை யறிவது? இரண்டாவதன்கண் தானே இன்மையின் எங்ஙனம் அறிவது? தனது ஸத்தா காலத்தில் ஆத்மாவே காலாந்தரத்தில் உண்டாம் தனது அஸத்தையினை யறிகின்ற தெனின், ஆயினும், ஸத்து ரூப ஆத்மா அநித்தியமாம். அதுவும், கிருத ஹாநி, அகிருதாப்யாகம (செய்த வினை யழிந்து செய்யாத வினை தோன்றிற்று)ப் பிரஸங்கத்தால் பரிஹாரம் செய்யப்பட்டிருத்தலின்.

மற்றும், ஆத்மாவின் அஸத்துத் தன்மையினைக் கூறுபவன், தனது ஆத்மாவை நிராகரிக்கின்றானா? அங்யனது ஆத்மாவை நிராகரிக்கின்றானா? முதலதன்கண் நிராகரிப்பவனின்றாகலின். நிராகரிக்குமாத்மாவே பரமார்த்த ஸத்தியமாம். இரண்டாவதன்கண் நிராகரிப்பவன் பரமார்த்தமாக



இருக்கின்றான். அதனால், ஆத்மாவின் அஸத்துத் தன்மை யாங்ஙனம்? ஆகவே, "அஸத் பிரஹ்ம மென்று அறிவானாயின், அவன் அஸத்தே யாகின்றான். பிரஹ்ம மிருக்கின்ற தென் றறிவானாயின், அதனால் இவன் ஸத்தை அறிந் திருக்கின்றான்" என்னும் சுருதியாம்.

மற்றும், பிரமாணம் ஸத் விஷயத்தில் பிரவிர்த்திக்கின்றதா? அல்லது, அஸத்திலா? அஸத்தி லெனின், ஆயின், ஸசவிஷாணமும் அஸத்துத் தன்மை ஸமாநத்தால் ஸாதிக்க. பிரமாணங்களுக்கு அஸத் ஸாதந ஸமர்த்துத் தன்மையானும். ஸத்தி லெனின், பிரமாணாதீந வஸ்து ஸத்தை யின்று. பிரமாணப் பிரவிர்த்திக்குப் பூர்வமே பிரமேய ஸத்தை அங்கீகரித்தலின். கொள்ளாக்கால், "ஸத்தின்கண் பிரமாணம் பிரவிர்த்திக்கின்றது" என்னும் தனது வசந வியாகோபமாம்.

ஸத் வஸ்துவின் பாநமே பிரமாணாதீந மெனின், விளக்க மின்றிய அநாத்ம அசேதநத்தின்கண் அங்ஙனம் ஆகுக. ஸ்வயம் விளக்க ஸ்வரூப ஆத்மாவின்கண் இவ்விதம் யாங்ஙனம்? உண்டாம். ஆகவே, "அந்த விளக்க ரூப ஆத்மாவைத் தொடர்ந்தே இவ் வெல்லாம் விளங்குகின்றன. அதன் விளக்கத்தால் இவ் வெல்லாம் விளங்குகின்றன." எனச் சுருதியு மிருக்கின்றது. மற்றும், ஆத்மாவின்கண் பிரமாணம் யாது? எனக் கேட்கும் புருஷனைக் குறித்து, எல்லாம் பிரமாணம் என்பதே உத்தரமாம். அறியப்படாததற்கே பிரமாண விஷய மாகலின். ஆத்மாவே அறியப்படாதாகலின். ஸ்வயமே ஆவரண ஸ்வபாவமாய ஜட வஸ்துக்கட்கு, அஞ்ஞாந லக்ஷண வேறு ஆவரண கற்பனையின்கண் பிரயோசந மின்மையால், அஞ்ஞாந விஷயத் தன்மை

யின்மையின் பிரமாண விஷய மன்றாகலின். பிரமாணுதீந அவித்தியா நிவிர்த்தி விசிஷ்ட ஆத்ம ஸ்வரூப சைதந்யத்தி ஞனே ஸர்வ ஜட வஸ்துக்களின் பிரதீதி பொருந்துதலின்.

ஆகவே ஸர்வப் பிரமாண சித்த ஆத்மாவுக்குப் 'பிர மாண மின்மையால் அஸத்துத் தன்மை' யென்பது நகைப்பு மாத்திரமாம்.

ஆயின், உபநிஷத் ஸம்பந்தத் தன்மை யாங்ஙனம்? ஸர்வப்பிரமாணத்திற்கும் விஷயமாய ஆத்மாவிற்கு உபநிஷத் மாத்திரத்தால் அறியப்படுந் தன்மை யின்மையின் எனின், அற்றன்று. பரிபூர்ண சச்சிதாநந்த பிரத்தியக் ரூபமாக வேறு பிரமாண விஷய மின்மையின், ஔபநிஷதத் தன்மை யெனக் கூறுகின்றேம். அற்றேல், ஸ்வயம் பிரகாசத்திற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை பொருந்தா தெனப் பூர்வம் கூறப்பட்டது. ஸத்தியம், உண்மையாக அஃதேயாம். அங் ஙன மாயினும், எங்ஙனம் மத்தியாநத்தி லிருக்கும் ஸ்வயம் பிரகாச ஸூர்யனிடத்திலும் பகல் குருடாகிய பேசகாதி (ஆந்தை) கள், "இருளால் மறைக்கப்பட்டவன் இச் சூர்யன்" எனக் கற்பிக்கின்றன. அங்ஙனமே, அத்தியந்த மூட புத்தியை யுடையவர்கள், "அஞ்ஞாநத்தால் மறைக்கப் பட்டது இவ் வாத்மா" எனக் கற்பிக்கின்றனர். இதனுல் இவ் வாறு, பூர்வமே ஆத்மாவின் மாகாத்மியத்தால் உண்மை யாக நிவிர்த்தியாக விருக்கும் அஸத்தாய ஆத்மாவின் கற்பித அஞ்ஞாநத்தின் நிவிர்த்தியின் பொருட்டு ஸர்வ வேதாந்தங்களும் பிரவிர்த்திக்கின்றன. ஸ்வயம் பிரகாச ஸ்வரூப ஆத்மாவில் அஞ்ஞாந நிவிர்த்திக்கு அங்கியமாய் வேறு பலம் நிரூபிக்கப்படாமையின். அதன் ஆகார விருத்



தியை யுண்டாக்குதலானே வேதாந்தங்கட்கு அதன் விஷ யத் தன்மை பொருந்துதலின். ஆத்மாவிற்கு ஸ்வயம் பிர காசத் தன்மையில் விவாதம் இன்று.

அங்ஙன மன்றே, ஆத்மா மற்றவற்றை யபேக்ஷிக்காத பிரகாச ஸ்வரூபம். தனது சத்தையில் பிரகாச அவ் வியபி சாரி யாகலின். ஸம்வித்துப் போன்று, அல்லது, ஆலோகம் போன்று.

ஆதலால், 'ஸ்வயம் பிரகாச ஆத்மா' என அபிப்பிராயம் செய்து ஜோதி யெனக் கூறப்பட்டது. ஸைந்தவ (உப்பு) கநம் போன்று விஞ்ஞாந கந முக்கிய ஸ்வரூபமாகலின். ஸ்வயஞ் ஜோதி ஸ்வரூபம் என்பது பொருளாம். ஆகவே, "ஈண்டு இப் புருஷன் ஸ்வயம் ஜோதி யாகின்றான்" எனச் சுருதியும் உளது. அற்றேல், ஒரு கால் 'ஆத்மாவினை நா னறிந்தேன்' என அநுபவமாம. ஒரு கால் 'ஆத்மாவை நா னறியேன்' என அநுபவமாம். ஆகவே, இவ் விரண்டு அநு பவங்களால் ஸ்தாபிக்கப்பட்ட ஞாதத் தன்மை, அஞ்ஞாதத் தன்மைகளால் ஸ்வயஞ் ஜோதித் தன்மை ஆத்மாவிற்கு விரோதிக்கின்றது. அங்ஙன மன்றே, எப்பொழுது 'ஆத்மா வினை நா னறிகின்றேன்' என்னும் அநுபவ அநுஸாரத்தால் ஞாதத் தன்மை, ஞாந கர்மத் தன்மை, ஆத்மாவிற்கு அங்கீ கரிக்கப்படுகின்றதோ, அப்பொழுது அநாத்மாப் போன்று ஸ்வயம் பிரகாசத் தன்மை பொருந்தாது.

எது எந்த ரூபத்தாலும், எந்த ஞாநத்திற்கும் ஒரு காலத்தும் கர்மத் தன்மையினை அடைவ தின்றே, அதுவே ஸ்வயம் பிரகாசமாம். அந்யதா (கொள்ளாக்கால்) ஸ்வயம்

பிரகாசத்வம் பாரிபாஷிகமேயாம். எப்பொழுது 'நான் என்னை அறிய வில்லை' என்னும் அநுபவ அநுஸாரத்தால் அஞ்ஞாதத் தன்மையே கொள்ளப்படுகின்றதோ, அங்ஙன மாயினும், ஸ்வயஞ் ஜோதித் தன்மை நாச மாம்.

ஒரு வஸ்துவின்கண்ணே ஏக காலத்தில் விளங்குகின் றது, விளங்க வில்லை யென அநுபவித்தற்கு ஸமர்த் தன்றாம், விரோத மிருத்தலின். எப்பொழுது விளங்குகின்றதோ, அப் பொழுதே விளங்க வில்லை என்னும் அநுபவம் இன்றாம். எப்பொழுது விளங்கவில்லையோ, அப்பொழுதே விளங்குகின் றது என்னும் அநுபவம் இன்றாம். ஆதலால், ஆத்மாவிற்கு ஸ்வயஞ் ஜோதித் தன்மை எங்ஙனம் பொருந்துகின்றது?

இது தோஷ மன்றாம். ஞாத அஞ்ஞாத விலக்ஷணமே ஆத்மா வாகலின். ஆகவே, "அறிந்ததி னின்றும் அந்யமே அறியாததி னின்றும்" என்னும் சுருதியும் உளது. 'ஆத்மா வினை நான் அறிகின்றேன்' என்னும் அநுபவத்திற்குக் கதி யென்னை யெனின், விசிஷ்ட விஷயத் தன்மையே. ஒரு அநுபவத்தின்கண் அஞ்ஞாந ஆநந்த வியாவிர்த்த நிர்விகற்பக வஸ்து ஸ்வரூப மாத்திரம் விளங்குகின்றது என அநுபவம் இன்று; எதனால் ஆத்மாவிற்கு ஞாந கர்மத் தன்மை யாகின்றது. பின்னையோ உபாதி விசிஷ்டமேயாம். அதற்கு ஞாந கர்மத் தன்மை யிருப்பினும் விரோத மன்றாம்; அதற்கு ஸ்வயம் பிரகாசத் தன்மை இன்று. சுத்தாத்மா விற்கே ஸ்வயம் பிரகாசத் தன்மை அங்கீகரித்தலின். என்னை நான் அறிய வில்லை என்னும் அநுபவம் ஆத்மாவின் ஸ்வயம் பிரகாசத் தன்மையின் ஸாதகமேயாம். அங்ஙன மன்றோ, இவ் வநுபவமே ஆத்ம விஷய அஞ்ஞாநத்தை



விஷயஞ் செய்கின்றது. ஆகவே, இவ் அநுபவத்தின்கண் அஞ்ஞாநம் போன்று ஆத்மாவும் விளங்குகின்றதெனக் கூற வேண்டும். கொள்ளாக்கால், அறியேன் என்பதே அதன் ஆகாரமாம். இதனால் ஆத்மாவினை நான் அறிவேன் என ஸ்வயம் பிரகாசத் தன்மைபால் பிரகாச ரூபமான ஆத்மா வினை தன் னகத்தே கொண்டு, இல்லை யென அஞ்ஞாந லக்ஷண ஆவரணத்தினை ஆண்டு விஷயஞ் செய்கின்றது. இதனால் ஒரே காலத்தில் விளக்கத் தன்மை, விளக்க மில்லாத் தன்மைகள் ஸ்வயம் பிரகாசாத்மாவிற்கு விரோத மின்று. ஆதலால், என்னை நான் அறியேன் என்னும் அநு பவ பலத்தானே ஆத்மாவிற்கு ஸ்வயம் பிரகாசத் தன்மை சித்தமாம்.

அற்றேல், 'கடத்தை நான் அறியேன்' என, அநாத்மா வின்கண்ணும் இவ் வித அநுபவ மிருக்கின்றது. ஆதலால் அதற்கும் ஸ்வப்பிரகாசத் தன்மைப் பிரசங்கமாம் எனின், கட மென்பது யாது? எதற்கு ஸ்வப்பிரகாசத் தன்மை ஸம்பாதிக்கப்படுகின்றது? கடத்துவாதி தர்மங்கள் யாண்டுப் பிரதீதி யாகின்றதோ, அது கடமாம் எனின், இதன் ஸ்வ ரூபம் யாது? அதனை நன்கு அநுபவித்து அந்யவற்றி னின் றும் பிரித்துக் காட்டுங்கள். கபாலாதி ஆரம்பித்த அவயவி விசேஷ மெனின், அற் றன்று. அவயவ அவயவித் தன்மை முதலியன கட ஸம்பந்தமாவன அங்கங்களே. இவைகளே கட ஸ்வரூபங்க ளலவாம். இவற்றி னின்றும் அந்யமாக ஸ்வரூபங் கூறத் தக்கது. இவற்றி னின்றும் அந்யமாக ஸ்வரூபத்தைப் பிரித்துக் கூறுதற்கு அசக்தன் எனின், அசக்தி யாங்ஙனம்? அநுபவிக்கப்படாமையினலோ? நிர்

விசேஷமாகலானா? முதல தன்று கட ஸ்வரூபம் ஸர்வ ஜநங்களின் அநுபவ சித்தமாகலின். இரண்டாவதன்கண்ணும் நிர்விசேஷம் கூறத் தக்கது. அநுபவிக்கப்படும் எச்சொரூபம், அது ஸ்வயமாகவே அநுபவிக்கப்படுகின்றதா? தன்னிற் பிந்ந வேறு பிரமாணத்தினாலா? இரண்டாவதன்கண் நிர்விசேஷத் தன்மை வியாகாத மாம். நிர்விசேஷ வஸ்து வேறு பிரமாணத்திற்கு விஷயம் என்பது பொருத்த மன்று. ஸர்வ லௌகிக சக்ஷுராதிப் பிரமாணங்கட்கு ஸவிசேஷ வஸ்து விஷயத் தன்மை நியம மாகலின். ஆதலால், நிர்விசேஷ ஸகல வாக்கு மநஸாதி அவிஷய ஸ்வயம் பிரகாச வஸ்து கட ஸ்வரூபம் என எஞ்சுகின்றது.

அஃது ஆத்மாவி னின்றும் பேதத்தினை யடைகின்றதா? இன்றா? என விசாரிக்கத் தக்கது. பேத மடைகின்றதெனின், பேதிக்கும் தர்ம மின்மையானும், நிர்விசேஷ மாகலானும், தர்மிப் பிரதியோகியாய இரண்டற்கும் ஸ்வயம் பிரகாசத் தன்மையால், அதனால் விசேஷிக்கப்பட்ட பேதத்திற்கு பிரமாணத்தால் கிரஹித்தற்கு ஸமர்த் தனாகலானும். ஆதலால், ஸ்வயம் பிரகாச ஆத்ம ஸ்வரூபமே கட மென நிலைபெற்றது.

இங்ஙனமே, வேறு பதார்த்தங்களும் ஆத்ம ஸ்வரூபமேயாம். ஆதலால், அநாத்மா ஆத்மாவி னின்றும் பிந்நமாக விருப்பதே யின்று. ஸமாந நியாயத்தால் எதற்கு ஸ்வயம் பிரகாசத் தன்மை ஸம்பாதிக்கப்படுகின்றது. இதனால் ஸ்வயஞ் ஜோதி ஸ்வபாவ ஆநந்த கந அஸங்க உதாஸீந ஆத்மாவே, அநாதி அநிர்வசநீய அவித்தியா ஸம்பந்தத்தால், இரஜ்ஜு, சர்ப்ப தண்டாதி ஸ்வரூபம் போன்று, த்வைதாகார



மாக விளங்குகின்றது. பரமார்த்தமாகவோ த்வைதமு மின்று; அத்வைதமு மின்று; கேவலம் விஞ்ஞாந கந ஆத்மாவே எனச் சித்தமாம்.

25. இவ் வாத்மா எல்லாவற்றிலும் ஸம்பந்தித்து, பாநு, பாசகன் எனப்படுகின்றது. இது அவிநாசி யாகலின் நித்தியமாம். எங்ஙனங் கொள்ளத் தக்கதாம்.

அற்றேல், இக லோக பர லோக சகல ஸாம்ஸாரிக துக்க, அதன் ஸாதந ஸமூகத்தி னின்றும் விடுபட்டு, அநாதி ஸம்ஸாரத்தி னின்றும் ஸம்பாதிக்கப்பட்ட புண்ணிய புஞ்ச பரிபாகத்தால் கல்மஷங்கள் நாசமாய், ஸமஸ்த விஷயங்களிலும் தோஷத்தைப் பார்த்தலால் வெளிப்பட்டு, பரம புருஷார்த்தத்தை இச்சிக்கும் முமுக்ஷுவிற்கு இஃதெங்ஙனம் உபாதேயமாம். ஆண்டு இவ் வாத்மா விநாச சாமக்கிரியை யின்மையின் நித்தியமாம். ஆத்ம விநாசத்தினைக் கிரஹித்தற்கு ஸமர்த் தின்மையின். தனது சத்தா காலத்தில் கிராஹிய மின்மையின். கிராஹிய காலத்தில் கிராஹக மின்மையின். இதற்குப் பரிச்சிந்நத் தன்மையால் அநித்தியத் தன்மை யநுமேய மென்னற்க. ஆத்மத் தன்மை யானே, ஆத்மாவே அபரிச்சிந்நமாம். எதனால், "எதனால் யடைகின்றது, எதனால் கிரஹிக்கின்றது, எதனால் விஷயங்களைப் புஜிக்கின்றது, எதனால் இதன் ஸதா இருப்பு, அதனால் ஆத்மா எனக் கூறப்படுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

வியாபகமாய ஆகாசத்திற்கும் அநித்தியத் தன்மை பார்க்கப்படுகின்றதெனின், அற்றன்று. வியாபகத் தன்மை

ஞாந மின்மையால். ஸர்வ ஸம்பந்தத் தன்மை வியாபகத் தன்மையாம். ஸர்வத்தின்கண்ணும் ஸர்வ பிரகாரத்தும் ஸம்பந்தத் தன்மை, அநுகத மில்லாதவற்றிற்கு அதிஷ்டா நத் தன்மை என்பது பொருளாம். அந்யத்தால் அந்யம் ஸர்வப் பிரகாரத்தும் வியாபிக்கப்படுவ தின்று. வியாப்பிய ஸ்வரூபத்திற்கு அஸத்துவத் தன்மைப் பிரசங்கத்தால். வியாபக ஸ்வரூபத்தை விட்டுத தனது ஸ்வரூபம் இன்மை யால். கொள்ளாக்கால், ஸர்வப் பிரகாரத்தும் வியாப்தி பொருந்தாமையின். கால தேச வஸ்து பரிச்சிந்ந மில்லாத ஆத்மாவின்கண்ணும் வேறு பிரமாண அபேக்ஷை யின்று. ஸூர்யன் போன்று ஸ்வயம் பிரகாச மாகலின். ஸர்வ ஜகத்தையும் விளக்குந் தன்மையால் சுருதியின்கண் பிரசித்த மாகலின். "அந்த விளக்கமான ஆத்மாவை அநுஸரித்துப் பின் ஸர்வமும் விளங்குகின்றன. அதன் பிரகாசத்தால் இதெல்லாம் விளங்குகின்றது" என்னும் சுருதியால்.

அங்ஙனமா மாயினும் சுக துக்க அபாவத்தி னின்றும் பிந்ந மாகலின், கொள்ளத் தக்க தன்றும்.

அற்றேல், இக் கொள்ளத் தகாத் தன்மை யாது? கொள்ளும் கிரியைக்கு விஷயத் தன்மை யின்மையா? இச்சை யின் விஷயத் தன்மை யின்மையா? தனது எத்தநத்தால் சாத்தியத் தன்மை யின்மையா? இந்த விசேஷ சுக துக்க அபாவ அந்யத் தன்மையா? விசேஷியத் தன்மையேயா? அந்யமா? முதல தன்று. இஷ்டப் பிராப்தியானும், சுக துக்க அபாவங்கட்கு கொள்ளத் தகாத் தன்மைப் பிராப்தி யாகலானும். சுகம், அல்லது, துக்காபாவம் ஆதாநக் கிரியை யால் விஷயஞ் செய்யப்படுவ தின்று. இரண்டாவது மன்று.



இச்சை, அதன் விஷய மென்னும் இரண்டற்கும் உபாதே யத் தன்மை வருதலின். அவ் விரண்டானும் உபலக்ஷிக்கப் பட்ட விஷய ஸ்வரூப மெனின், அற் றன்று. துக்கத்திற் கும் உபாதேயத் தன்மை வருதலின். ஞாந விஷயத்திற்கே இச்சா விஷயத் தன்மை யிருத்தலின், இச்சையினை யுண்டாக் கும் ஞாநத்திற்கு ஸவிகல்பத் தன்மையினால் துக்காபாவத் திற்கு விசேஷண மாகிய துக்கத்திற்கு விஷய மாகலின். விஷயம் ஏக தேச மெனின், அற் றன்று. சுகத்தில் அஃ தின்மையின். இச்சையின் விஷய மாகிய விசேஷிய ஸ்வ ரூபம் மாத்திரம் உபாதேயம் எனின், அற் றன்று. "நான் ஸ்வர்க்கி யாகின்றேன்" என்னு மிடத்து ஆத்மாவிற்கும் அத் தன்மைப் பிராப்தியாகலின். மூன்றாவது மன்று. தனது யத்தநத்தால் ஸாதிக்கத் தக்க, துக்க அதன் ஸாதநங்கட்கும் உபாதேயத் தன்மை யின்மையின். நான்காவது மன்று. விசேஷணம் வியர்த்த மாகலின். ஐந்தாவது மன்று. ஸாத் திய விசிஷ்ட மின்மையின். அந்யம் கூறுவதற்கு ஸமர்த் தின்மையின். துக்க, அதன் ஸாதந தாதாத்மியம் அங்கீ கரியாது தள்ளப்பட் டிருத்தலின். ஸர்வ ரூபத் தன்மை யின் வியாகாதம் என்னற்க. ஸர்வாதிஷ்டாநத் தன்மைக்கே, ஸர்வ ரூபத் தன்மை அர்த்த மாகலின். ஸத்தியத்திற்கு மித்தியா தாதாத்மியம் இருப்ப தில்லை. ஸத்தியத் தன்மை விரோத மாகலின். ஆகவே, அநுபாதேயத் தன்மையே கூறுதற்கு அசக்கிய மாகலின். இந்த அநுபாதேயத் தன்மை யாது? ஆத்மாவிற்கு அநிஷ்டம் சம்பாதிக்கப்படு கின்றதெனின், அற் றன்று. அந்யவற்றால் மறைக்கப்படா மைக்கே உபதேயத் தன்மை யாகலின். அதுவும், ஸுக துக்க அபாவங்கட்கேயாம். மற்றவற்றிற்கு அதன் உபஸர்ஜநத்தால்.

ஸுக துக்க அபாவங்கட்கு அந்ய மாகிய ஆத்மா பாவ ரூபத் தன்மையினால், துக்க அபாவ ரூப மன்றாகலின். ஸர்வ சூந்யாத்மத் தன்மையில் துக்காபாவ ரூபத் தன்மையும் இருக்கின்ற தெனின், அற் றன்று. விஞ்ஞாதாவே ஆத்மா வாகலின். சூந்யம் விஞ்ஞாதா வன்று. விஞ்ஞானம் சூந்யாசிரய மன்று. அபாவத்திற்குப் பாவ தர்மத் தன்மை பொருந்தாமையின்.

தர்ம தர்மி பாவம் ஆரோபித மெனின், ஆயின், ஆரோப்பியத்திற்கு அதிஷ்டானம் புகல வேண்டும். அதிஷ்டான மின்றிப் பிராந்தி யில்லை. சூந்யமே யெனின், ஆயின், சூந்யத்தைச் சம்பந்தித்தே எல்லாம் எல்லாமாகப் பிரதீதி யாகுக. அங்ஙன மிருப்ப தில்லை. ஸத்துத் தன்மையினாலேயே எல்லாம் விளங்குதலின். மற்றும், எல்லாவற்றிற்கும் ஆரோபிதத் தன்மையில், ஆரோப அதிஷ்டானத்தின் சித்தி முன்னரே கூற வேண்டும். அதுவும் ஸ்வயமாகவே யென்பதால், எங்ஙனம் சூந்யமாம். சூந்யம் ஸ்வயமாகச் சித்திப்ப தில்லை. கொள்ளாக்கால், பரிபாஷா மாத்திரத் தன்மைப் பிராப்தியால். ஆகலின், பாவ ரூபத் தன்மையினானே துக்கா பாவ ரூபத் தன்மை யின்று. ஸுக ரூபத் தன்மை யின்று. மாலை முதலிய விஷய ஞான அஜந்ய மாகலின். ஸுகமும் அதன் ஜந்ய மாகலின். அந்யதா அதனை இச்சித்தலினால் அதன் உபாதானம் பொருந்தாமையின். ஜந்யாஜந்யங்கட்கு அபேதம் பொருந்தாமையின்.

ஸுகத்தினைச் சம்பந்தித்தே அதனால் ஜநிக்கப்படுவதின்று. 'ஸுகம் எனக் குண்டாயிற்று' என்னும் பிரதீதி



யினாலும், ஸுக ஆத்மாக்களின் ஸம்பந்தமாகிய ஸமவாயம் ஜந்ய மன்றாகலானும். தனது ஆத்ம ஸம்பந்த மின்றிய ஸ்வதந்தர சுகத்தில் பிரமாணம் இல்லை. உண்ணாலும் அங்கீகரிக்கப்படுவ தில்லை. உன்னாலும் ஆத்மாவின் தாதாத்மியத்தினை யடைந்த நித்திய சுகமே அங்கீகரிக்கப்படுதலின். மற்றும், சுக ஆத்மாக்களின் தாதாத்மியத்தில், 'நான் சுகம்' என்னும் பிரதீதிப் பிரசங்கமாம் எனின், அது வருவது மில்லை. ஆனதால், சுக துக்க அபாவங்களின் அந்ய மாகலின், ஆத்மா அநுபாதேயமேயாம். அவற்றினின்றும் அந்யமாய புருஷார்த்தம் இருப்ப தில்லை. எதனால் முமுக்ஷுக்களுக்கு ஆத்மா கொள்ளத் தக்கதாம்.

ஆத்மத் தன்மையே பரம புருஷார்த்தகத் தன்மைக்குப் பிரயோஜக மன்று. அங்ஙனம் லோகத்தில் வியவகார மின்மையின். "சுகம் எனக்கு உண்டாகுக. துக்கம் எனக்கு உண்டாகா திருக்குக" என ஆத்ம ஸம்பந்தியாகிய சுக துக்க அபாவங்களை விரும்பப்படுதலின் "ஆத்மா எனக்கு உண்டாகுக" என்னும் விருப்பம் இருப்ப தில்லை. விரும்பப் படாதது புருஷார்த்த மன்று. இது அலௌகிகப் புருஷார்த்தம் அன்று. லௌகிக வியவகாரத்தில் தள்ளப்படாமை யானேயே வேதத்தால் புருஷார்த்த மெனப் பிரதிபாதிக்கப் படுதலின். கொள்ளாக்கால், அலௌகிக மாகலின் ஸ்வர்க் கத்திற்கும் சுக ரூபத் தன்மை யிருப்ப தில்லை. மற்றும், இந்த லோகோத்தரம் யாது? எதனால் இக லோக பர லோகத்திற் குள்ள ஸாதநத்தோடு கூடி எல்லாப் புருஷார்த் தத்தினையும் விட்டு, ஜந்ம முதல் பிரஹ்மசரியம் முதலிய ஸர்வ துக்க ஸமூகத்தினால் ஆத்மாவினைக் கிலேசஞ் செய்து,

“இவ் வாத்மா அலௌகிகப் புருஷார்த்தம்” எனக் கூறுவதானே கிருதார்த்தனாய்விடுவான். ஆகவே, “சூந்ய விருந்தாவநத்தில் வசம் சிருகால (நரி)த் தன்மை எவன் இச்சிக்கின்றான். கௌதம! நிர்விஷய மோக்ஷத்தினை யடைவதற்கு அருகனாவ தில்லை.” என்னும் ராகிகளின் வசநமும் இருக்கின்றது.

மற்றும், இவ் வாத்மா புருஷார்த்த மாயின், பிரயத்நமின்றி யடைந்த ஆத்மாவினை உபேக்ஷித்து, விஷய சம்பந்த சுக லோபத்தினால், அந்தந்தக் காமியத்தினைக் கொடுக்கும் தீர்த்தம் முதலியவைகளில் பிராணிகள் ஏன் மரண மடைகின்றனர்? அவர்கள் பிராந்தர்க ளல்லர். சாஸ்திரத்தினாலும் அது அநுமோதிக்கப்படுதலின். “ஹே தாத! லோக வசநத்தினா லன்று. வேத வசநத்தினாலு மன்று. அந்தப் பிரயாக மரணத்தினைக் குறித்துப் புத்தியினைத் தள்ளத் தக்கது.” என. குஷ்டம் முதலியவைகளினால் கஷ்டப்படுபவர்களும் துக்காபாவத்தினை உத்தேசித்து மரண மடைகின்றனர் என்பது ஸர்வ ஜநப் பிரசித்தமாம். ஆயின், அநாத்மாவே கொள்ளத் தக்கதா? ஸம்சய மென்? சுக துக்க அபாவங்களின், அதன் ஸாதந மாகிய புத்ர களத்ர கிரஹ க்ஷேத்திர பசு ஹிரண்யம் முதலியவற்றின் உபாதேயத் தன்மை நிந்திக்கப்படாமையின். அற்றேல், இக லோக, பர லோக ஸம்பந்தி யாகிய ஸகல சுக, அதன் ஸாதநக்கூட்டங்களை உபேக்ஷித்துக் கேவலம் ஆத்மாவினை யுத்தேசித்து, சிரவணாதிகளிலும் சிலர்கள் பிரவிர்த்திக்கின்றனரே யெனின், ஆயின், அவர்கள் பிராந்தர்க ளாகுக. அநேகர்கள் மத்தியில் அநுக்ரஹம் நியாயியம் என்னும் நியாயத்தினால், அது இருவர் மூவர் கட்கேயாம். “விஞ்ஞாநம், ஆநந்தம், பிரஹ்மம்” என ஆத்மா



விற்கு சுக ரூபத் தன்மை சுருதியில் கேட்கப்படுகின்றதெனின், கேளுங்கள். இதனால், ஆத்மா புருஷார்த்தமன்று. சுக மென்பதே புருஷார்த்த மன்று. தனது ஸம்பந்தித் தன்மையால் அதற்குப் புருஷார்த்தத் தன்மையிருத்தலின். கொள்ளாக்கால், சத்ரு சுகத்திற்கும் புருஷார்த்தத் தன்மை வருதலின். சுகம் சுகத்திற்குப் புருஷார்த்தமன்று. நாநா துக்கத்தினாற் பேதிக்கப்பட்டிருக்கும் ஸம்ஸார ஸம்பந்த ஸுகமும் அநுபாதேயமே யெனின், அற் றன்று. வேறு கதி யின்மையின். பிக்ஷுவின் பயத்தினால் சமைப்பதில்லை யென்ப தில்லை. உண்டாகின்ற தெனின், துக்கம் நிவிர்த்திக்கத் தக்கது. சுகம் கொள்ளத் தக்கது.

ஆயின், ஆத்ம ஞாநத்தின் பொருட்டு சிரவண விதி எங்ஙனமாம். (எனின்) துக்காபாவத்தின் பொருட்டேயாம். இங்ஙனம் ஆத்மாவிற்கு அபுருஷார்த்தத் தன்மைப் பிராப்தியில் கூறப்படுகின்றது.

26. ஸர்வ வஸ்துக்கட்கும் எது ஆத்மா? எதன் பொருட்டுச் சர்வ ஜகத்தும்? இது ஆநந்த ஸமுத்திரம். ஸ்வதந்திரம். இது எங்ஙனம் அநுபாதேயமாம்.

27. அந்ய வஸ்துக்க ளெல்லாம் நர சிருங்கம் போன்று பேதிக்கின்றது. ஸர்வ பதார்த்தங்களுக்கும் சத்தையாயிருக்கின்றது. அதனால் எங்ஙனம் ஆதேய மின்றியதாம்.

28. எதன் வசத்தில் பிரஹ்மா முதல் கிருமி பரியந்தமான எல்லாப் பிராணிகளு மிருக்கின்றன. ஸர்வ வஸ்துக்கட்கும் ஈசாநன். அது எங்ஙனம் ஆதேய மின்றியதாம்.

29. எது ஸர்வ பூதங்கட்கும் நேத்திரமாம். எந்த மநம் மநதினையும் அறிகின்றது. எது ஜோதிக் கெல்லாம் ஜோதி, விபு, தேவன், (அது) எங்ஙனம் உபாதேய மன்றாம்.

30. மோதப் பிரமோத பக்ஷங்களால் தமசு சம்பந்த ஆநந்த ஆத்மா ஸகல லோகங்களையும் ஜீவிக்கச் செய்கின்றது. (அது) எங்ஙனம் ஸ்வயம் உபாதேய மன்றாம்.

31. எந்த ஆநந்த ஸமுத்திரத்தினது லேசமானது ஜகத்திற் சென்று பிரஹ்ம லோகம் முதலியவற்றில் சுக சமுத்திரத்தினை விஸ்தரித்தது. (அதனை) எவன் விடுவன்?

32. எதனைப் பார்க்கில் ஹிரண்ய கர்ப்பனது ஐசுவர்யம் திரண மாகின்றது. ஸர்வ புருஷார்த்தங்கட்கும் கரையாய் இருக்கின்றது. (அது) எங்ஙனம் புருஷார்த்த மின்றியதாம்?

33. எதனது இச்சையினால் ஸம்பத்துக்க ளடைந்த இந்திராதிகள் தத் தம் போகங்களைத் தியாகம் செய்து பிரஹ்மசாரி விரதத்தை யநுஷ்டித்தனர். (அது) மனிதர்களுக்கு எங்ஙனம் புருஷார்த்தம் இன்றியதாம்.

34. ஸர்வ வைதிக நாநா விதக் கிரியைகளாகிய யாகாதிகள் எதனைப் பார்க்கும் பலத்தால் விதிக்கப்படுகின்றன. அதில் உனக்கு உபேக்ஷை யெங்ஙனம் கூறுக.

35. எதன் திருஷ்டி மாத்திரத்தினால் ஸர்வ காமம் முதலிய துக்க பூமிகள் க்ஷணத்தில் நாச மடைகின்றன. இது எங்ஙனம் உனக்கு உபாதேய மன்றாம்?



36. எவனது சுழுத்தியில் ஸர்வ ஸாக்ஷியாய், ஸந்தோஷத் தன்மை கொடுக்கின்றது. அதில் எவனுக்கு உபேக்ஷையுண்டாகின்றதோ, அவனைப் பார்க்கிலும் அங்யமாய்ப் பசு (மாடு) எ திருக்கின்றது?

அங்யவற்றால் மறைப் பின்றிய தன்மை, உபாதேயத் தன்மை (என்பது) ஸத்திய மாம். அதுவும் ஆத்மாவின் கண்ணே விசிராந்தி யடைகின்றது, சுக துக்க அபாவங்களும் அதன் பொருட்டாகலின். கொள்ளாக்கால், அங்யரது சுக துக்காபாவமும் உபாதேய மாம். அதனால், ஆத்மாவே பரம புருஷார்த்த மாம். சுக துக்க அபாவ ரூபமாகலானும். பாவ ரூப ஆத்மாவிற்குத் துக்காபாவ ரூபத் தன்மை பொருந்தா தென்னற்க. ஆத்மாவினிடத்தில் துக்கம் பாரமார்த்திகமாக யிருக்கின், இத் தோஷம் உண்டாம். இங்ஙனம் இருப்ப தில்லை. பின்னரோ, அஞ்ஞான மாகிய ஸர்ப்பத்தின் பணத்தினின்றும் உண்டாய தேகாதி யபிமான மாகிய விஷப் பல்லின் நுனியி லிருக்கும் ராகாதி லக்ஷண ஹாலாஹல விஷ ஜ்வாலையினால் கட்டப்பட்ட தனது ஆத்ம திருஷ்டியினையுடைய புருஷன், சூரியனிடத்து இருட் போன்று, துக்கமின்றிய தனது ஆத்மாவினிடத்திலும் ரௌரவாதி அநேக பேதத்தினால் பிந்நமான நரக ஸமுதாயத்தினின்று முண்டாய துக்க ஸமூகத்தினைக் கேவலம் ஆரோபிக்கின்றான்.

ஆரோபிதத்தின் அபாவம் அதிஷ்டானத்தினும் பிந்நமாவ தில்லை. அதிஷ்டானத்தின் அபேதத்தினாலேயே ஆரோபிக்கப்பட்டிருத்தலின். பேதத்தினால் அது அஸத்தாகலின். அஸத்தின நிஷேதம் ஸத்தாகலின். ஆகலின்,

துக்காபாவமே பரம புருஷார்த்தம் என எவர்கள் அங்கீகரிக்கின்றனரோ, அவர்கட்கும் ஆத்மாவே பரம புருஷார்த்தமாம். அது ஸர்வ ஸம்சார துக்க நிவிர்த்தி ரூப மாகலின். ஸாத்திய மன்றாகலின், ஆத்மாவிற்கு அபுருஷார்த்தத் தன்மையுள தெனின், அற் றன்று. ஸாத்தியத் தன்மையால் புருஷார்த்தத் தன்மை நிராசம் செய்யப்பட்டிருத்தலின். ஸ்வயம் சித்தித்த துக்காபாவத்தினை யுத்தேசித்து முமுக்ஷுவின் பிரவிர்த்தி பொருந்தா தெனின், அற் றன்று. பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரத்தின் பின் பிரவிர்த்தியின் பொருத்தமின்மை இஷ்ட மாகலின். அதன் பலம் உண்டாயிருத்தலின். பூர்வமோ, சேஷ மின்றிய துக்காபாவ ரூப பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தினனேயே சபல மாகலின். ஞானமும் ஸாத்திய மன்று, விருத்தி ஆரோபித மாகலின். சைதந்யம் ஆத்மா வாகலின் எனின், அற் றன்று. இப் பராமர்சம் ஞானத்தின் உத்தர காலத்தை யுடைய தாகலின். துக்காபாவமும் கேவலம் புருஷார்த்த மன்று திருஷ்ட துக்க விஷயத்திலும் போக்ய சுக லோபத்தினல் பிரவிர்த்தி பார்க்கப்படுதலின் எனின், அற் றன்று. ஆத்மாவே பரமாநந்த ரூப மாகலின், ஸுகமு மிருத்தலின். ஈண்டு விவாத மில்லை; பரப்பிரமைக்கு இடமாந் தன்மையால் ஸுக ரூபத் தன்மை சித்தித்தலின். சுக மின்றிய ஆத்மாவில் பிரமை பார்க்கப்படாமையின். சுகம் ஜந்ய மாகலின். ஜந்யாஜந்ய மாகிய ஆத்ம சுகங்கட்கு அபேதம் பொருந்தாது என்னற்க. ஜந்யத் தன்மை அசித்த மாகலின். "சுகம எனக்கு உண்டாகுக" என்னும் பிரதீதியினல் அதன் சித்தி யென்னற்க. நல்ல அதிருஷ்ட வசத்தினல் ஆத்ம ஸ்வரூப சுகத்தினை அபிவ்யஞ்சகஞ் செய்தற்கு யோக்யமாய அந்தக்கரண விர்த்தி யுண்டாகுதலால் அந்யதா



சித்தி (வேறு வகைத்தாய) யாகலின். "நான் சுகம்" என்னும் பிரதீதி பிராப்த மாம் என்னற்க. வித்வானைக் குறித்து இஷ்ட அடை வாகலின். அவித்வானுக்கோ அத்தியஸ்த அஹங்கார தேஹாதிகளி னிடத்தே ஆத்மாபிமாந மிருத்தலின். ஆண்டு ஆத்மா உபஸர்ஜநமாகவே (மறைப்பாகவே) விளங்குதலின்.

இதனனே, "ஞாந சுகாதி குணங்களை யுடையது ஆத்மா" என்னுந் தார்க்கிகர்கள் பிராந்தர்களாயினர். துக்கத்திலும் இக் கதி ஸமம் என்னற்க. துக்கம் சுழுத்தி முதலியவைகளில் வியபிசாரி யாகலின், ஆத்ம ஸ்வரூபத் தன்மை பொருந்தாமையானும். பிரமாண மின்மையாலும், சுக ரூபத் தன்மையினைக் கிரகிக்கும் சுருதி விரோதத்தானும். ஆகவே, ஆத்மத் தன்மையே பரம புருஷார்த்தத் தன்மைக்குப் பிரயோஜக மாம். லோகோத்தரத் தன்மை உபாலம்பம் (நிந்தை) இன்று. மஹாநுபாவர்க ளாகிய வியாஸ வஸிஷ்டாதிகளினலும், ரிஷபாதி மஹா ராஜாக்களினலுமே இக லோக பர லோக சம்பந்தி யாகிய சகல சுக, அதன் சாதனங்களும் ஆத்ம இச்சையினலேயே அபேக்ஷிக்கப்படுதலின். வெகு அநுக்ரஹ நியாய மன்று. தேஹாத்ம யபிமாநத்தில் அஃதின்மையின். சுக ரூபத் தன்மையிலும் ஆத்மாவிற்குத் தனது சம்பந்தி சுக மின்மையின அபுருஷார்த்தத் தன்மை இன்று. சம்பந்தம் ஆத்ம அபேத உத்தேசிய மாகலின். சுகமே அத்தியந்தம் உபாதேயம். எங்ஙனம்? 'எனது பிரியதம ஆத்மாவில் அபேதமாகப் பிரவேசிக்க' என்னும் இச்சையை யுடைய புருஷன், பேதப் பிராந்தி பிரபல மாகலின், அபேதத்தைச் செய்தற்குச் சமர்த் தின்றியவனுப்ச்

சம்பந்த மாத்திரத்தினுல் சந்தோஷத்தினை அடைகின்ருன். சம்பந்தம் ஸ்வயம் புருஷார்த்த மன்று. சுக துக்க அபாவ அங்ய மாகலின். "சுகத்திற்கு சுகம் புருஷார்த்த மன்று" என்று யாது கூறப்பட்டதோ, அது சுகத்தில் அநாத்மத் தன்மையின் ஆரோப காரண மாகலின். குஷ்டம் முதலியன உடையவர்கட்கு மரணம் பொருந்தா தென்பது இல்லை. அத னுலேயே ஆத்மாவிற்குச் சுக ரூபத் தன்மை சித்தித்தலின். அவர்கள் பரமப் பிரிய தம மாகிய ஆத்மாவினிடத்துத் துக்க காரணம் தேகம் என, அதனை உபேக்ஷிக்கின்றனர், ஆத்மா வினை உபேக்ஷிப்ப தில்லை. பாரலௌகிக சுகத்தில் இச்சை பார்க்கப்பட்டமையின். இதனுல் காம்ய (இச்சிக்கப்பட்ட) தீர்த்தம் முதலியவைகளில் மரித்தல் வியாக்யாநஞ் செய்யப் பட்டது. மரணமும் தேஹ பரித்தியாக ரூப மாகலின்.

ஆத்மாவிற்கே புருஷார்த்தத் தன்மையில், முக்த சம் சாரிகட்கு சமாநத் தன்மை பிராப்தி யெனின், அற்றன்று. ஞாந அஞ்ஞாநங்களினுல் விசேஷ மிருத்தலின். அஞ்ஞாநி, பிராந்தன், கர்த்தா, போக்தா, சம்சாரி, ஜரா மரண தர்மம், என ஆத்மாவினை அறிகின்ருன். வித்வானே அதன் விருத்த மாய், அகர்த்தா, அபோக்தா, அசம்சாரி, ஜரா மரண ஜந்மாதி கள் இன்றிய ஸ்வப்பிரகாச சச்சிதாநந்த பரிபூரண ஸ்வபாவம், பசி, தாகாதி யின்றியது, அஸ்தூலம், அநணு, இதன்று இதன்று. சத்திய ஞாநாதி லக்ஷண, சர்வ ஜகத் அதிஷ்டாந பூத மாகிய ஆத்மாவை, ஆகம ஆசாரிய தனது அநுபவ, ஏக வாக்கியத் தன்மையினுல் சாக்ஷாத்காரஞ் செய்து, சர்வ துக்க காரணமான அஞ்ஞாந, அதன் காரியங்களைப் பாதித் துத், தேச கால வஸ்து பரிச்சேத மின்றிய பரிபூரணுநந்த



விக்ரஹ தனது மஹிமையினு லிருக்கும் பரம புருஷார்த்த மாகின்ருன். அதன் பின் இச்சிக்கத் தக்கது இல்லை. எல்லா இச்சையும் ஆத்ம அடைவின் கரை யாகலின்.

அற்றேல், ஆத்ம சாக்ஷாத்காரமானது சுருதி ஜங்யம் எங்ஙன மாம்.? இந்திரிய ஜங்ய ஞாநத்திற்கே சாக்ஷாத்காரத் தன்மை யிருத்தலின். சப்தத்திற்கும் பரோக்ஷ ஞாந ஜநகத் தன்மை ஸ்வபாவ மாகலின். அபரோக்ஷாத்மாவில் சப்தத் திற்கும் அபரோக்ஷ ஞாந ஜநகத் தன்மையேயுக்தம் என்பது பொருத்த முடைத் தன்று; காரண ஸ்வபாவத்திற்கு அங் யதா கர்த்தும் (வேறு வகைத்தாய் செய்தற்கு) அசக்கிய மாகலானும், அபரோக்ஷ யோக்கிய மாகிய வஹ்ஹி முதலிய வற்றில் சப்தம் முதலியவற்ருல் பரோக்ஷ ஞாநமே உண்டா குதலானும். பரோக்ஷ ஞாநமும் அப்யாஸம் செய்யில் அப ரோக்ஷ மாகின்றது என்பது பொருத்த முடைத் தன்று. அநுமிதி முதலியவற்றில் அங்ஙனம் பார்க்கப்படாமையின். உத்தரோத்தர ஞாநத்திற்கும் சாப்தத் தன்மை சமாந மாகலின். அபரோக்ஷ ஞாந மின்று என்னற்க. அபரோக்ஷப் பிராந்தி யாகிய அஞ்ஞாந, அதன் காரியங்களை நாசஞ் செய்யா தென்னும் பிரசங்கத்தால். ஆதலால், ஆத்மாவி னிடத்து அபரோக்ஷ ஞாநமே யின்று.

ஈண்டுக் கூறப்படுகின்றது:—

சிரவணுதி அப்யாஸத்தினு லுண்டாய, சாப்த ஞாநத்தா லுண்டாய, பாவனையின் விருத்தியோடு கூடிய அந்தக்கரண மே, ஆத்மசாக்ஷாத்காரத்தில் காரண மாம். பாவனையின் அதீந மான சாக்ஷாத்காரத்திற்கு மரணமான புத்ர சாக்ஷாத்காரம்

போன்று அப்பிராமாண்யம் என்னற்க; சப்தப் பிரமாண மூலத்தினால் விசுவசித்தலின். "எதனின்றும் மனதோடு கூட வாக்கு அடையாது திரும்புகின்றன" என்னும் சுருதியின் விரோத மின்று. ஆகமத்தினால் அறியுந் தன்மையிலும் சமான மாகலின். அந்த வாக்கியத்திற்கு, லௌகிக சப்தம், வைதிக சம்ஸ்காரத்தால் சம்ஸ்காரம் செய்யப்படாத மனங்களால் கிரஹிக்குந் தன்மையின் நிஷேதபர மாகலின். அஃதன்று. ஆகமமே ஆத்மாவின்கண் அபரோக்ஷ ஞானத்தினை யுண்டாக்குதலின். அந்த "ஔபநிஷத் புருஷனைக் கேட்கின்றேன்" என்னும் சுருதியில், ஆத்மாவினிடத்தே ஔபநிஷதத்வ விசேஷணம் கேட்கப்படுதலின். அதுவும் அந்யவற்றின் அவிஷயத் தன்மையோடு அதன் மாத்ர விஷயத் தன்மையில் பொருந்துகின்றது. அங்ஙனம் கொள்ளாக்கால், வேறு பிரமாணத்தின் வியாவிர்த்தகத் தன்மை யின்மையினிடத்து விசேஷணம் வியர்த்த மாகலின். லௌகிக வாக்கிய மாகிய "பத்தாமவன் நீ" என்பதாதிகட்கும் ஆத்மாவினிடத்தில் அபரோக்ஷ ஞான ஜநகத் தன்மையே பார்க்கப்படுதலின். பிரமாண ஸ்வபாவத்திற்கு ஹாநி வரும் எனின், அற்றன்று. பிரமாண ஸ்வபாவம் பிரமேய அநுசாரி யாகலின். பிரமேயமும் நித்திய அபரோக்ஷ மாகலின்.

அபரோக்ஷத் தன்மை, ஞானத்தி லுள்ள தர்மம் என்னற்க. "எது சாக்ஷாத் அபரோக்ஷம் பிரஹ்மம். இவ்வாத்மா சர்வாந்தரம்" என, ஆத்மாவிற்கும் அபரோக்ஷத் தன்மை கேட்கப்படுதலின். அந்த அபரோக்ஷத் தன்மை என்னெனின், உண்மையாக பிரமாதாவோ டவ்யவஹிதத் தன்மையே. அதுவும் பிரமாதாவில் விசிராந்தி யாகின்றது.



எவ்வளவு எவ்வளவு பிரமாதா கூட்டப்படுகின்றதோ, அ
வளவவ்வளவு பரோக்ஷத் தன்மையின் உத்கர்ஷம் பார்க்க
படுதலின். ஆகவே, அபரோக்ஷ ஸ்வபாவ ஆத்மாவில் பரோ
ஞானத்தினை உண்டாக்கி வேதம் பிராந்தியினையே உண்டாக்
கின்றது, வேறு வகைத்தா யிருப்பதனை வேறு விதமா
அறிவித்தலின். மோக்ஷ சாதன ரூபமான ஆத்ம சாக்ஷா
காரத்திற்கு மனோ ஜந்யத் தன்மையில் வியபிசாரி கரண
யத் தன்மையினால் அப்ராமாண்யப் பிரசங்கம் வரும். வே
மூலத் தன்மையினால் பிராமாண்யம் என்னற்க; அபரோ
மாக வேதத்தால் அறிவிக்கப்படாமையானும், 'வாக்
மனதுகட்கு அதீத' மென்னும சுருதியின் விரோதத்தி
னும். லௌகிக விஷயத் தன்மை யின்று; முக்யத்தின் பா
கம் இன்மையின். சுருதி விஷயத் தன்மையிலும் தோஷ
சமானம் அன்று; லக்ஷணையினால் அதனைப் போதித்தலி

அற்றேல், தத்தவமஸ்யாதி வாக்கியத்தில் லக்ஷணை
பொருத்த மன்று. பாக (த்யாக) லக்ஷணையினால் ஏக தேச
தின் பரிக்ரஹத்தில், சுருதார்த்த பரித்யாகப் பிரசங்கத்தா
ஒரு விபக்தியினை அந்தமாக வுடைய தோஷ மின்
இரு பதங்களின் சாமாநாதிகரண்ய பராமர்சத்தின் பி
பதார்த்தங்களின் அபேத மாகிய வாக்கியார்த்தம் விளங்
கின்றது. அதுவும் விருத்த ஸ்வபாவ முடைய, சம்ச
அசம்சாரி யாகிய ஜீவ பரமாத்மாக்கட்கு பொருத்த மின்
யின் முக்யார்த்தம் பொருந்தாமையால் லக்ஷணையி
பொருந்துவது பொருத்தமாம் என்னற்க; சுருதியினால் ஸி
த்ததில் பொருத்த மின்மை யின்மையின். விருத்த ஸ்
பாவங்கட்குப் பேதத்தினைக் கிரஹிக்கும் வேறு பிரமாண

தின் விரோதத்தினால், விருத்த மின்றிய அம்சங்களின் அபேதம் போதிக்கப்படுகின்ற தெனக் கூறற்க; சுருதி விரோதத்தினாற் பேதத்தினைக் கிரஹிக்கும் பிரமாணத்திற்கே அப்ராமாண்ய மாகலின். அந்யதா லக்ஷணையினாலும் அகண்ட அத்விதீய ப்ரத்யகாத்மாவினை யறிவித்தல் பொருந்தாது. சகல பேதத்தினையும் கிரஹிக்கும் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களின் விரோதத்தினால். ஆகவே, முக்யார்த்தத்தில் பொருத்த மின்மை யின்று. சக்கிய லக்ஷியங்கட்கு சம்பந்த மில்லை, லக்ஷிய மாகிய ஆத்மா அஸங்க மாகலின். அஸங்கத்தோடு ஒன்றும் சம்பந்திப்ப தில்லை. அஸம்பந்த மானது லக்ஷிக்கப்படுவ தில்லை. அங்ஙனம் பார்க்கப்படாமையின். எவ்விதத்தும் அபிதேய மின்றிய அர்த்தம் லக்ஷிக்கப்படுவ தெனப் பார்ப்ப தில்லை. லக்ஷிய பதார்த்தத்தில் மூகத் தன்மை (ஊமை)ப் பிரசங்கத்தால். ஆண்டும் லக்ஷணையில் லக்ஷணையின் அநவஸ்தாப் பிரசங்கத்தால். மற்றும், பதங்களால் ஒரு அர்த்தம் லக்ஷிக்கப்படுகின்றதா? அல்லது, இரண் டர்த்தமா? முதல தன்று. ஒரு பதம் வியர்த்த மாகலானும், பதார்த்த வாக்கியார்த்தங்கட்கு சமானத் தன்மைப் பிராப்தியானும்.

அல்லது, விசேஷத்தில், அகண்ட வாக்கியார்த்தம் ஆவதில்லை. இதனானே, இரண்டாவ தன்று. லக்ஷணையின் அபாவப் பிரசங்கத்தாலும். விருத்தங்களின் அபாவம் பொருந்தாமையினால் செய்யப்பட்ட லக்ஷணை பிந்நங்களின் அபேதத்தில் முடிவடைவ தில்லை.

மற்றும், வேதாந்தத்தில் தத்த்வமஸி முதலிய வாக்கியமே பிரதாநம். மற்றைய வெல்லாம் அதன் உபகரணமே



யாம். ஆகவே, பிரதாந வாக்கியத்தின்கண்ணே எங்ஙனம் லக்ஷணை? ஆண்டு ச்சமவேதார்த்த மின்மையின், அந்ய விடத்தே அது பொருந்துகின்றது. குணத்திலோ, "அந்யாய கல்பனை" யென்னும் நியாயத்தினால். ஈண்டுச் சிலர் தத்த்வமஸ்யாதி வாக்கியத்தில் லக்ஷணையே அங்கீகரிப்ப தில்லை. விருத்தமா யுள்ள ஜீவ பரமாத்மாக்களின் சாமாநாதிகரண்யம் பொருந்தாமை யின்று. இரஜ்ஜு ஸர்ப்பங்கட்குப் போன்று ஒன்றன் பாதத்தினாலும் அது பொருந்துதலின். இரண்டதன் மத்தியில் எதற்குப் பாதம் என்னும் விநிகமகம் (யுக்தி) யின்மையின், பரமாத்மாவிற்கே பாதம் ஆசங்கிக்கப்படின், அப்பொழுது சாஸ்திரம் புருஷார்த்த மற்ற ஜீவனிடத்தில் முடிவடைதலின் பிரமாண மன்றாம் எனக் கூறற்க. "ஸத்திய ஞாநம், அநந்தம், பிரஹ்மம்" என்னும் மந்திர வர்ணத்தினால் பிரஹ்மத்திற்கு ஸத்தியத் தன்மை நிச்சயிக்குங்கால் பரிசேஷத்தினால் ஜீவனாகிய சம்சாரிக்கே பாதம் வருதலின்.

அற்றேல், இச் சீவன் சைதந்யமா? ஜடமா? முதலதில் பிரஹ்மமே யாகலின், பாதம் பொருந்தாது. இரண்டாவதில், கடாதிகள் போன்று போக்த்ருத் தன்மை பொருந்தாது எனின், இது தோஷ மன்று. சைதந்ய ஆபாசத் தன்மையினால் அவனுக்குப் பிரசித்த மாகிய ஜடாஜட விலக்ஷணத் தன்மை யிருத்தலின். ரூப மற்ற சைதந்யத்திற்கு ஆபாசம் பொருந்தா தென்னற்க; ரூப மற்ற ஆகாசத்திற்கும் ஸ்வச்ச மாகிய ஜலத்தில் ஆபாசம் பார்க்கப்படுதலினாலும், "ரூப ரூபங்களைக் குறித்துப் பிரதிரூப மானான்" என்னும் சுருதியினாலும். ஆகவே, "இவ் வெல்லாம் ஆத்மா" என்னும் சாஸ்திரத்தினால்எல்லா அஞ்ஞாந, அஞ்ஞாந காரியமும் பாதிக்

கப்படில் கேவல ஆநந்த ரூப பரமாத்மாவே மோக்ஷாவஸ்தை யில் எஞ்சுதலின் அற்பமும் பொருத்த மின்மை யின்று.

அற் றன்று. பந்த மோக்ஷங்கட்கு வையதிகரண்யத் தன்மைப் பிராப்தத்தானும், மோக்ஷத்தை இச்சிப்பவனது பிரவிருத்தி பொருந்தாமையானும். அந்யனுக்கு மோக்ஷத் தின் பொருட்டு அந்யன் யத்நஞ் செய்வ தில்லை. அல்லது, தனது நாசம் புருஷார்த்த மன்று. துக்க நிவிர்த்தி யினல் துக்க அபாவமே புருஷார்த்த மென்னற்க; எவனுக்கு இப் புருஷார்த்த மாகும், தான் பாதிக்கப்பட்டிருத்தலின். ஜீவாத்மா அஸத்திய மன்று. "இந்த ஜீவாத்மாவினல்" என ஸத்திய மாகிய பரமாத்மாவோடு அபேதங் கேட்கப் படுதலினுலும். "இதனி னின்றும் வேறு திருஷ்டா இன்று" என்பதாதிப் பேதப் பிரதிஷேதத்தானும். ஸ்வயம் அசம்சாரி ஸ்வபாவமாய பரமாத்மாவிற்குச் சம்சாரி ஸ்வபாவ ஜீவாத்மத் தன்மை பொருத்த மின்மை யின்று. அவித்தையாதி உபாதி சம்பந்தத்தினல், ஆகாசத்தின் நீலத் தன்மை போன்று பொருந்துதலின். "ரூப ரூபங்களைக் குறித்துப் பிரதிரூப மாயினன்." என்னும் வாக்கியத்தினல் ஜீவனுக்கு ஆபாச ரூபத் தன்மை இருக்கின்ற தென்னற்க. ஆண்டே அவ்வவ் மநுஷ்யத் தன்மையினல் கவரப்பட்ட அவ்வச் சரீர சமானத் தன்மையே பிரதிரூப பதத்தினல் கொள்ளற்பால தாகலின். அல்லது, பிரதிபிம்பம் இருக்குக. அங்ஙன மாயினும், அசத் திய மன்று. பிரத்யபிஞ்ஞையினல் பிம்பப் பிரதிபிம்பங் கட்கு அபேதங் கிரஹிக்கப்படுதலின். ஆயின், பேத வியவ காரம் யாங்ஙனம்? சர்வ கல்பனையு மின்றிய ஒரே ஸ்வரூப மாகிய முகம் சந்திரன் முதலியவற்றில், பிம்பப் பிரதிபிம்ப ஸ்வரூபம் என மூவித வியவகாரம், உபாதி பிரவேசித்து



ஆரோபத்தின் பின் பார்க்கப்படுதலின். ஆகலின், தத்வ மஸ்யாதி வாக்கியத்தில் பாதத்தின்கண் ஸாமாநாதிகரண்யம் என்னும் கற்பனை வேத பாஹ்யமாய் நியாய முடைத் தன் ரும். இதனல், இலக்ஷணையினல் பரிபூரண சச்சிதாநந்த பிரத்யகாத்ம ஞாநம் பொருந்தாது என.

ஈண்டுக் கூறப்படுகின்றது:—

37. விருத்தங்களினது அபேதம் வேதத்தினல் அறி யப்படுவ தில்லை. வேறு கதி யின்மையின். வேறு பிரமா ணம் பாதிக்கப்படுதலின்.

ஈண்டு, முக்யார்த்தத்தில் பொருத்த மின்மை யின்மை யின் லக்ஷணை யின்று என யாது கூறப்பட்டதோ, அது இன்று. விருத்த மாகிய ஜீவ பரமாத்மாக்களின் அபேதம் பிரமாணத்தினல் பாதிக்கப்படுதலின். விருத்தங்களின் அபேதம் பிரமாணத்தினல் ஓரிடத்திலும் பார்ப்ப தில்லை. பிரமாணந்தரம் இன்று. வேதத்தால் பாதிக்கப்படுதலின். அநுபபத்தி யின்று. "பாதிக்கத தக்கது" என்பதானே பாதிக்கப்படுவ தில்லை. பின்னமோ, தனது விஷய சித்தி வேறு வகைத்தாய்ப் பொருந்தாமையில். (பாதிக்கப்படு கின்றது.) ஈண்டோ வேறு விருத்தியினுலும் அது பொருந் துதலின். முக்கியார்த்தத்தில் அநுபபத்தியேயாம். இங் ஙனம் கொள்ளாக்கால், யாண்டும் லக்ஷணையின் நாசப் பிரசங் கம் வரும். லோகத்திலும் நிச்சயிக்கப்பட்ட பிராமாண்யத் தின்கண்ணே லக்ஷணை யாம். ஆகவே, அவ்வித வாக்கிய விரோதத்தினல் விரோதி வேறு பிரமாணம் பாதிக்கப்படுத லின். பொருத்த மின்மை யின்மையின் லக்ஷணை யின்று.

லக்ஷியார்த்த மாகிய அஸங்கத்திற்கு வாச்சியார்த்தத்தோடு சம்பந்தம் பொருந்தா தென்பது இன்று. ஸ்வயம் அஸங்கத்திற்கும் அவித்தியாந்தக்கரண முதலிய உபாதி சம்பந்த மாகிய அவித்தையின் அத்தியாரோபமும், பகற் குருடாகிய கூகையினாற் கற்பிக்கப்பட்ட சூரிய இருட் சம்பந்தம் போன்று பொருந்துதலின்.

கற்பித சம்பந்தத்தினால் இலக்ஷணை பாரமார்த்திக மன்றெனின் உரத்திக் கூறற்க; அத்வைத விரோதத்தினானே த்வைதத்திற்கு அஸத்தியத் தன்மையிலும் அத்வைதவாதிகட்குச் சித்தாந்த விரோதம் அதிஸ்பஷ்ட மாகலின்.

லக்ஷிய பதார்த்தத்தில் மூஹத் தன்மைப் பிரசங்கம் இன்று. பதார்த்தத்தினைப் பிரதிபாதிக்கும் "விஞ்ஞாநம் ஆநந்தம பிரஹ்மம்" என்ப தாதியானேயே தத் பதார்த்தம் பிரதிபாதிக்கப்படுதலின். ஆண்டு லக்ஷணை யின்மையின் அநவஸ்தை யின்று. ஞாநத் தன்மை முதலிய சாமாந்ய வைசிஷ்டியத்தில் தர்மங்க ளின்றிய லக்ஷிய பதார்த்தத்தின் அசித்தி யின்று. நாநா உபாதி சம்பந்த வியக்தியினும் அந்ய சாமாந்யம் அங்கீகரிக்கப்படாமையின். பிரதிபிம்பங்களில் பிம்பம் போன்று அநுகத வியவகாரம், அநுகத வ்யக்தியானே பொருந்துதலின். த்வம் அர்த்தமோ கூறிய வழியால் சாக்ஷி முதலிய பதத்தினால் கூறுதற்கு சமர்த்தமேயாம். சாக்ஷியினிடத்தில் விப்பிரதிபத்தி யின்று. சர்வப் பிரமாண வ்யவகாரத்திற்கு நாசப் பிரசங்கத்தால். அஞ்ஞாத மாகிய அப்பிரமா விஷயம் சாக்ஷியின் அந்யமாகச் சித்தியாமையின். பிரமாண சித்தத் ·தன்மையில் அஞ்ஞாநத்திற்கு நிவிர்த்தி யின்று. அல்லது, அத்தன்மையில் பிரமாண வையர்த்திய மாகலின். பிரமாணத்தினாற் செய்யப்பட்ட அதிசய மின்மையின். பிராந்தியினாற் சித்தித்ததற்கு பிரமாணத் தன்மை விரோதத்தினால். ஆகவே பிரமாணப் பிரவிர்த்திக்குப் பூர்வமே அஞ்ஞாதத் தன்மையினால் சாக்ஷியினால் சாதிக்கப்பட்ட பிரமேயத்தினையே பிரமாணம் விஷயஞ் செய்கின்ற தென்பது பொருத்த முடைத்தாம், இதனால் ஈண்டு விப்பிரதிபத்தி யின்று. ஆகவே, ஸுரேசுவரரும், "யாண்டுப் பிரமாணம் அப்பிரமாணம், பிரமாபாஸங்கள் பிரமையினைச் செய்கின்றனவோ, அதன் (சாக்ஷி) அஸம்பவம் யாங்ஙனம்?" எனக் கூறியுள்ளனர். பதங்கட்கு ஏகார்த்தத் தன்மை, அநேகார்த்தத் தன்மை விகல்ப மின்று. ஏகார்த்தத் தன்மையிலும், வாக்கியப் பிரமாண ஜந்ய ஞாநமே பேதப் பிராந்தியினை நிவிர்த்தி செய்தலின். ஒரு பதம் வியர்த்த மன்ற. அஃதின்றி விரோத மின்மையின். லக்ஷணையினால் அகண்ட வாக்கியார்த்தத்தினைப் பிரதிபாதித்தற்கு சமர்த் தின்மையானும். பத மாத்திரத்திற்கு அப்பிரமாணத் தன்மை யாகலானும்.



பிரதாந வாக்கியத்தில் லக்ஷணையின் பொருத்த மின்மை யின்று. அந்யவற்றால் மறைக்கப்படாத அர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் தன்மையே பிரதாநத் தன்மையாம். அதுவும் லக்ஷணையினாலா? முக்கியத்தாலா? என்னும் இது வேறே யாம். நியாய விரோதம் இன்று. யாண்டுப் பிரதிபாதிக்கப்படும் அர்த்தத்திற்குச் சப்த சக்தி கோசரத் தன்மை யிருக்கின்றதோ, ஆண்டு நியாயம் உண்டாகுதலின்.

அற்றேல், கர்த்ருத்வ, போக்த்ருத்வ, ஸுகித்வ, துக்கித்வாதி அநேக சம்சார தர்மங்களினின்றும் அந்யஞ் செய்

யப்பட்டு, அவஸ்தாத்திரயங்களின் அநுகதமாய், சுத்தமாய், சிதம்சமா யுள்ள பிரத்யகாத்மாவிற்கு, ஜகத் கர்த்ருத்வாதிகளினின்றும் அந்யமாய், ஆகாசாதிகளில் அநுஸ்யூதமாய், சுத்தமாய், பரிபூர்ண சச்சிதாநந்த ஸ்வபாவமா யுள்ள பரமாத்மாவினோடு அபேதம் லக்ஷணையினால் போதிக்கப்படுகின்ற தெனப் பிரதிபாதிக்கப்பட்டது. ஆகவே, எல்லாப் பேதமும் நிவிர்த்திக்கப்பட வில்லை. அநாத்ம பேதம் அங்ஙனமே யிருத்தலின். ஆத்ம பரமாத்மாக்களின் பேதத்தினைக் கிரஹிக்கும் பிரமாணம் போன்று, அநாத்ம பேதத்தினைக் கிரஹிக்கும் பிரத்யக்ஷாதிகட்கும் அப்பிராமாண்யமே என்பது பொருத்த முடைத் தன்று; திருஷ்டாந்தம் சித்தியாமையின். ஆத்ம பரமாத்மாக்களின் பேதங்களைக் கிரஹிக்கும் பிரமாண மின்று; அவ் விரண்டும் ஸ்வயம் பிரகாசத் தன்மையினால் பிரமாண அவிஷய மாகலின். விசிஷ்டத்தினை விஷயஞ் செய்யும் பிரமாணத்திற்கு, விசேஷண பேதத்தினைக் கோசரிக்குந் தன்மையினால், அந்யதா சித்தத்திற்கு, ஆத்ம பரமாத்மாக்களின் பேதத்தினைச் சாதிக்காமையின். விசேஷியத்தின் அபேதத்தினைக் கிரஹிக்கும் தத்த்வமஸி முதலிய பிரமாணத்தினால் பாதிக்கப்பட்டிருத்தலின். அநாத்ம பேதத்தினைக் கிரஹிக்கும் பிரத்தியக்ஷாதிக்குப் பாத மிருப்ப தில்லை.

அநாத்ம ஸ்வரூப கோசரத்திலும் பிரத்தியக்ஷம் முதலியவற்றிற்குப் பேதத்தினைக் கோசரிக்குந் தன்மை யின்று. தர்மிப் பிரதியோகி பேதங்களின் கிரஹணத்தில், கிரம, யௌகபத்தியம் முதலிய விகல்பம் பிராப்தமாகுங்கால், அந்யோந்யாசிரயம், ஆத்மாசிரயம், அநவஸ்தை, பிராக் லோபம்,



விநிகமக மின்மை முதலிய அநேக தோஷங்களால் கவரப் படுதலின் எனக் கூறற்க.

அந்ய மாகிய பேதத்தின் அகோசரத் தன்மையிலும் ஸ்வரூப பேத கோசரத் தன்மை நிவிர்த்திக்கக் கூடாமை யின். "ஸ்வரூபம் பிந்நம்" என்னும் பிரதீதியின் பொருத்த மின்மை யின்று. "ராகுவின் சிரஸ், ஆத்மாவின் சைதந்யம்" என்பன போன்று பொருந்துதலின்.

பேத ஸ்வரூப சப்தங்கட்குப் பரியாயத் தன்மை வருவ தின்று. தனது வியவகாரத்தில், அந்யவற்றின் அபேக்ஷை அபேக்ஷை யின்மைகளால் விசேஷிக்கப்படுதலின். அபேதத்தில் அதன் பொருத்த மின்மை யின்று. ஒரு தேவதத்தனிடத்திலும் பிதிருத் தன்மை முதலிய வியவகாரத்தின் பொருட்டுப் புத்திராதியின் அபேக்ஷை பார்க்கப்படுதலின். பிராப்த அபிராப்த விவேகத்தினால் ஸாபேக்ஷத் தன்மையே பேதமாக இருக்குக என்று கூறற்க. அதுவும் ஸ்வரூபத்தின் வேறாகாமையின். ஸ்வரூபத்தி னின்றும் எதற்குப் பேதமோ, அதற்கு ஸ்வரூப மின்றிய தன்மை பிராப்த மாம். அங்ஙனம் கொள்ளாக்கால், ஸ்வரூபமே அகண்ட மாம் எனக் கூறற்க. கடத்தி னின்றும் கடத்தின் பேதத்திலும், அகடத் தன்மை பார்க்கப்படாமையின்.

ஒரு கடத்தினின்றும் வேறு கடத்தில் கிஞ்சித் வைதர்மியம் இருக்கின்றதே என்று அரையற்க. இருக்கும் அதற்கும் புகன்ற தோஷத்தினால் பேதத் தன்மை யங்கீகரிக்கப் படாமையின். வைதர்மியம் இருக்கும் காலத்தே ஸ்வரூப

பேதம் என்று புகலற்க. அநாத்ம ஸ்வரூபங்களும் வைதர்மிய வியாப்ய மாகலின்.

சிலரால், அததன் யோக்கியமாய், மூன்றே பேதம். எங்ஙனம்? கடாதியில் ஸ்வரூபமும், அந்யோந்யாபாவமும், வைதர்மியமு மாம். சாமாந்யம் முதலியவைகளில், இரண்டே; வைதர்மியம் இன்மையின். அபாவத்தில் ஸ்வரூபமே, வேறு பொருந்தாமையின், என யாது கூறப்பட்டதோ, அது பொருத்த முடைத் தன்று. ஸ்வரூப பேதம் அவசிய மாகலின். மற்றைய இரண்டற்கும் வியபிசாரித் தன்மை யிருத்தலின். பேத வியவகாரப் பிரயோஜகத் தன்மை யின்மையின், அங்கிகாரம் வையர்த்திய மாகலின். ஏகாகார வியவஹாரமும், ஏக ரூப விஷய சாத்தியத் தன்மை நியம மாகலின். ஸ்வரூப பேத பக்ஷத்தில், தன்னி னின்றும் தனக்குப் பேத மிருக்கின்ற தென்று கூறற்க. தனக்குப் பிரதியோகி கோடியில் நிவேசிக்கப்படுதலின், அந்ய தர்மி யின்மையின். அல்லது, தர்மி கோடி நிவேசத்தால் பிரதியோகி யின்மையின். பேத ஸ்வரூபங்கட்கு பரஸ்பர அந்தர்பாவத்தால் அந்யதா (இரண்டி லொன்றின்) பரிசேஷப் பிராப்தி யின்று. பேதத்திற்கு ஸ்வரூபத்தினும் வேறாகாமையின். ஸ்வரூப பேதம், பிந்நத்தில்—பேத வியவகாரப் பிரயோஜகமா? அல்லது, அபிந்நத்திலா? என்னும் விகல்பத்திற்கு இட மின்று. உபஸ்தித மாகிய வஸ்து மாத்திரத்தில் தர்மிப் பிரதியோகியின் ஞாந அபேக்ஷை அநபேக்ஷைகளால் பேதாபேத வியவகாரங்கள் உண்டாகுதலின்.

அற்றேல், பிரபஞ்சத்திற்கு அஞ்ஞாந காரியத் தன்மை யூற் புகலப்பட்டது. அதனுல் எங்ஙனம்? பிரத்யக்ஷாதி



அநுஸாரத்தினுல் பேத சங்கை யெனின் அற் றன்று; அதுவே சித்தியாமையின். பிரஹ்ம காரியத் தன்மை அநேக விடத்தி னின்றும் கேட்கப்படுதலின். "ஹே ஸௌம்ய! இவ் வெல்லா ஜகத்தும் ஸ்ருஷ்டிக்கு முன் ஸத்ரூப மாகவே யிருந்தன.", "எதனி னின்றும் இப் பூதங்கள் உண்டாயின", "அவ் விவ் வாத்மாவி னின்றும் ஆகாசம் உண்டாயிற்று", "எங்ஙனம் அக்நியி னின்றும் க்ஷுத்ரங்களான விஸ்பு லிங்கங்கள், இங்ஙனமே இவ் வாத்மாவி னின்றும் எல்லாத் தேவதைகளும், எல்லா லோகங்களும், இவ்வெல்லா ஜகத்தும், ஆத்மாவினின்றும் உண்டாகின்றன." என்பன வாதி சுருதிகளானும். "ஜகத்தின் ஜந்மம் முதலியன எதனி னின்றும்" என்னும் நியாயத்தினுனும்.

அற்றேல், அஞ்ஞாந காரியத் தன்மையும் அநேக விடத்தில் கேட்கப்படுகின்ற தெனின்; "மிருத்யுவினுலேயே இச் சகத் ஆவரிக்கப்பட்டிருக்கின்றது.", "அதனுல் இது அவ்யாகிருதமா யிருந்தது", 'இந்திர னுகிய பரமாத்மா மாயையினுல் எல்லா மானுன்", 'மாயையினைப் பிரகிருதி என மதிக்க", "அஸத் இருந்த தில்லை. ஸத் இருந்த தில்லை. தமமே இருந்தது.", என்பன வாதி சுருதிகளாலும், "மாயா மாத்திரம் கார்த்ஸ்ந்யத்தினுல் வெளிப்படாத ஸ்வரூப மாகலின்." என்னும் நியாயத்தினுலும். ஆயின், இங்ஙனம் சுருதிகட்குப் பரஸ்பரம் விரோத மிருத்தலின், இரண்டு காரணமும் இருப்ப தில்லை. ஆயின், ஜகத் காரணம் யாது? எனின், யோக்யாநுஸாரமாகப் பரமாணு முதலியனவே. ஆதலால், பிரத்யக்ஷம் முதலியவற்றூற் சித்தித்த அநாத்ம பேதம் விழித்துக் கொண் டிருக்கு மிடத்து எங்ஙனம் அத்வைத சித்தி யாம்? அஃது இங்ஙனம் ஸங்கிரஹ மாம்.

ஆத்ம அபேதப் பிரமிதியினாலும் அத்வைதம் அவர்கட்குச் சித்திப்ப தில்லை. பிரத்யக்ஷாதிப் பிரமாணத்தினால் அநாத்ம பேதம் நன்கு சித்தித்தலின்.

அற்றன்று. சுருதி அபிப்பிராயம் அறியாமையான், "தத்த்வமஸி" என்ப தாதி சுருதியினால் அநாத்மாவினை வேறாக ஸ்தாபித்துச் சுத்தாம்சங்கட்கு அபேதம் போதிக்கப்படுகின்ற தென்பது சுருதியின் அபிப்பிராய மன்று, பின்னரோ, பிரத்யக் சைதந்ய மாகிய கூடஸ்தனிடத்தில், ஜாக்ரம் முதலிய அவஸ்தாத் திரயமும், கர்த்ருத்வம் முதலிய அநர்த்தத் தொகுதியும் ஆகிய வியபிசாரி யாய வெல்லாம் ஆண்டே அநுகத சாக்ஷியினிடத்து அத்தியஸ்தம் என்று அந்வய வியதிரேகங்களால் அதன் அந்யமாக அதன் ஸ்வரூபம் இன்று என நிச்சயித்து, சுத்த மாகிய பிரத்ய காத்மாவோடு பிரஹ்மத்தின் அபேத சித்தியின் பொருட்டுப் பிரஹ்மத்தினிடத்திலும் ஜகத் கர்த்ருத் தன்மை, பரோக்ஷத் தன்மை முதலியனவும், ஆகாசாதி ஜகத் ஸமூகமும் ஆகிய அநநுகதம், அநுகத மாகிய அந்த சச்சிதாநந்த ஆத்மாவினிடத்து ஆரோபிக்கப்பட்டு, அஸத்தாய்ப் பிராந்தியினாலேயே தோற்றுகின்றது என, அந்வய வ்யதிரேகங்களால், அத்யாரோப வாதத்தினை ஆசிரயித்துப் பிரவிர்த்தித்த, ஸிருஷ்டி வாக்கியத்தின் பின் பிரவிர்த்தித்த, "இதன்று இதன்று" என்பதாதி வாக்கியத்தினாலும் நிச்சயம் செய்யப்படுகின்றது. அதனால், சுத்த மாகிய தத் த்வம் பதார்த்தங்களாகிய, லக்ஷியாம்ச மாகிய அநாத்ம சம்பந்த மற்றவற்றிற்குப் பேதத்தில், அல்லது, அபேதத்தில், பிரமாணத்தினைப் பாராது, ஸந்தேஹிப்பவனாய் ஸம்ஸார ரோக இராஜா நுசரக் கர்ப்ப வாசம் முதலிய அநேக ரோகங்களினா லுண்டான துக்க ஸமூஹத்தின் அநுபவத்தினா லுண்டாய உத்வேக முடையவனாய், பிரஹ்ம லோகத்தி லுண்டாகும் ஸுகத்தையும் விஷம் போன்று கொள்பவனாய், "ஆத்மவித் சோகத்தினைக் கடக்கின்றான்" என்பதாதி சுருதியால், ஸம்ஸார தாவாக்கினியினா லுண்டான சந்தாபத்தினைத் தணிக்கும் அமிர்த ஸமுத்திரமாகிய ஆத்ம வித்தையினை யறியாதவனாய் உள்ள பரம ஜிஞ்ஞாஸுவானவன், ஸ்வரூப அபரோக்ஷத்தினைத் தரிசிப்பிக்கும் பரம காருணிகராய குருவினிடத்துச் செல்லுகின்றான். அவரால், சுத்த மாகிய தத் த்வம் பதார்த்தங்களின் அபேதத்தி னிடத்து, தத் த்வமஸ்யாதி வாக்கியத்தினால் நித்தியம் நிர்த்தோஷமாகப் போதிக்கப்படில், ஸ்வயமே அத்வைத தத்வத்தினை ஸாக்ஷாத்காரம் செய்து, தனது ஆநந்த திருப்தனாய் ஆத்மா ராம னாகின்றான். இதனால் சுருதி யபிப்பிராயத்தின் பரிஞ்ஞான மின்மையினால் "அநாத்ம பேதத்தினால் அத்வைத நாச" மென்பது உண்டாயிருக்கின்றது.

"ஸ்வரூப பேதம், பிரத்யக்ஷாதி கோசரம்," என யாது கூறப்பட்டதோ, அது அதிதுச்ச மாம். பிரத்தியக்ஷாதிகட்கு அஸத் விஷயத் தன்மையினால், ஸ்வரூப அகோசர மாகலானும், ஸ்வரூபத்திற்குப் பேதத் தன்மை பொருந்தாமையானும். எங்ஙன மெனின்?, கேட்பாயாக. சர்வ தர்மங்களுமின்றிய சுத்தம் ஸ்வரூபம் பேதமா? அல்லது, விசிஷ்டமா? முதலதில், வியவகார ஹேதுத் தன்மையும் அதற்கு இன்றெனக் கூற வேண்டும். ஆகவே, சர்வ வியவகாரங்களுக்கும் ஆஸ்பதம் இன்றிய, சர்வ தர்மங்களும் விடுபட்ட, 'அஸ்தூலம் அநணு' என்ப தாதி சாஸ்திரத்தினாற் சித்தித்த

ஸத் ரூப பிரஹ்மமே வேறு பெயரால் 'பிரத்தியக்ஷாதி கோசரம்' எனக் கூறப்பட்ட தாகின்றது; அதுவும் பொருந்துவ தில்லை. "சக்ஷுவினால் கிரஹிக்கப்படுவ தில்லை. வாக்கினா லன்று. அந்ய தேவர்களாலு மன்று. தபஸினாலு மன்று. கர்மத்தினாலு மன்று" என்பதாதி சுருதி விரோதப் பிரஸங்கத்தினால். இரண்டாவதில், விசேஷண விசேஷ்யங்களின் பேதத்தில், விசிஷ்டம் வேறு ஸ்வரூபம் பேத மெனக் கூற வேண்டும். ஆகவே, ஆண்டும் வேறு, ஆண்டும் வேறு என, அதுவே உத்தரங் கூற முடியாத அநவஸ்தையாம். அல்லது, அபேதத்தில் விசிஷ்ட ஸ்வரூபம் சித்திப்ப தில்லையாம்.

அல்லது, விசிஷ்டம் ஸ்வரூபம் பிரத்யக்ஷாதிகளால் கோசரிப்ப தில்லை. அதுவும் சுத்த வஸ்து ஸ்வரூபம் போன்று நிர்த்தர்மக மாகலின். ரூபாதி விசிஷ்டத்தில் ரூபாதிகள் இருப்பன வல. விசிஷ்டம் என ஒரு வஸ்து இருப்ப தில்லை. விசேஷண விசேஷ்ய அதன் சம்பந்தங்களின் அந்ய மாய் அஃது அநுபவிக்கப்படாமையின். அவற்றிற்கும் வெவ் வேறாயும், ஸமுதாயங்களினாலும் விசிஷ்ட வியவகாரம் உண்டாகாமையின். ஸம்பந்தமே விசிஷ்ட மன்று, விசேஷண விசேஷ்ய அதன் ஸம்பந்த மென்னுமிடத்தில் ஸம்பந்தத்திலும் அதன் வியவகாரம் பார்க்கப்படாமையின். விசேஷண விசேஷ்யங்கட்கு அதன் வியவகார அபாவப் பிரசங்கத்தினால். வஸ்து ஸ்வரூபம் பேதம் எனச் சங்கித்தற்கும் சமர்த் தின்று; அந்த விதாரண நாச அதன் பிரதியோகிகட்கு அபேதம் பொருந்தாமையின். ஆத்மாக்களின் பேதம் வஸ்து ஸ்வரூப நாச ரூப மாகலின். பட விதாரணம் பட ஸ்வரூப மன்று. வஸ்து ஸ்வரூபத்தினை



அதிக்ரமித்திருக்கும் நிஸ்வரூப நிராசிரய பேதத்தின் அஸித்தியே யாம்.

ஆசிரயம் பிந்ந மாவ தில்லை. இங்ஙனங் கொள்ளாக்கால், த்வம்ஸமான கடமும் ஜலாதார மாகும். ஆசிரயம் அபிந்ந மாயிலோ, பேதம் விரோதத்தானே யிருப்ப தில்லை. ஆதலால், அநாதம விசாரத்தினால் வியர்த்தமாம். எவ்விதத்தும் பிரத்யக்ஷாதிகட்கு ஆத்மாநாத்ம பேத கோசரத் தன்மையின் றெனச் சித்த மாம்.

"அஞ்ஞாந, பிரஹ்மங்களைக் கோசரிக்கும், ஜகத் காரணத் தன்மை விஷய சுருதிகட்குப் பரஸ்பரம் விரோதம்" எனயாது கூறப்பட்டதோ அற் றன்று.

38. பிரஹ்மத்தினை யறியாமையினால் ஜகத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. பிரஹ்மம் அகாரண மாகலின். அதிஷ்டாநத் தன்மை மாத்திரத்தினால் பிரஹ்மம் காரண மென்று கூறப்படுகின்றது.

திருசியத் தன்மை முதலிய அநுமாநத்தினாற் சித்தித்த அநிர்வசநீய ஜகத்திற்கு, அநாதி அநிர்வசநீய அவித்தையே காரண மாம். பிரஹ்ம மன்று. அந்தக் கூடஸ்தனுக்கு, காரிய காரண விலக்ஷணத் தன்மையினால், "அவ் விப் பிரஹ்மம் அபூர்வம். அநபரம், அநந்தரம், அபாஹ்யம், இவ் வாத்மா பிரஹ்மம், எல்லோராலும் அநுபவிக்கப்படுகின்றது" என்பதாதி சுருதியால்.

ஆயின், பிரஹ்மத்திற்கு ஜகத் காரணத் தன்மை சுருதியிற் பிரசித்தம் யாங்ஙனம்?, ஜகத் காரண அதிஷ்டாநத்

தன்மையினால் காரணத் தன்மை உபசாரத்தினாலும், பிரஹ்ம காரண சுருதிக்கு அந்யார்த்தத் தன்மையானும். "ஒன்றே அத்விதீயம்." என்னும் சுருதியால் அத்விதீயத் தன்மை பிரஹ்மத்திற்கு ஸித்த மாம். அஃதெங்ஙனம் ஸம்பாவிக்க எனக் காரிய காரணங்களின் அபேதம் லோகப் பிரசித்தமாம். பிரஹ்மமும் ஜகத் காரணம் என அஸம்பாவனை யாங்ஙன மிருக்கின்றது? ஆகலின், அதற்கு அத்விதீயத்தில் ஸம்பாவனைப் புத்தி மாத்திரப் பிரயோஜன மாகலின். அஞ்ஞானமும் ஜகத் காரணம் எனச் சுருதியினால் கருதப் படுவ தின்று, அது பிராந்தி நிமித்த மாத்திரத்தினால் கூறியிருத்தலின். காரிய காரண வாதம் வேதாந்த பாஹ்ய மாகலின். விவர்த்தமே வேதாந்த வாத மாகலானும், ஜகத் காரணம் யாது? எனக் கேட்கில், அடைந்த அஞ்ஞானத்தின் நிவிர்த்தி மாத்திரப் பிரயோஜனத் தன்மையினால் அஞ்ஞானம் காரண மெனக் கூறுதலானும்.

அற்றேல், இந்த அஞ்ஞானம் காரியமா? அகாரியமா? முதலதில், இதன் காரணம் அஞ்ஞானமா? பிரஹ்மமா? முதலதில், அதனாலேயே அதனை யுண்டாக்குவதில் ஆத்மாசிரய மாகலின். வேறு அஞ்ஞானத்தினை யநுஸரிக்கில் அநவஸ்தை முதலிய பிரஸங்கத்தினால். இரண்டாவ தன்று; பிரஹ்மம் அகாரணமாக லானும், மோக்ஷ மின்மைப் பிரஸங்கத்தினாலும். இரண்டாவதிலோ, அநாதி பாவ பதார்த்தத்திற்குப் பிரஹ்மம் போன்று நிவிர்த்தி யின்மைப் பிரஸங்கம் வரும். கற்பிதத் தன்மை, அகற்பிதத் தன்மைகளினால் விசேஷம் என்னற்க; கல்பனையின் ஸாமக்கிரி யின்மையினால் கல்பனை பொருந்தாமையின். இவ் வத்தியாஸம்



அநாதி யென்னற்க; அத்தியாசத் தன்மை சித்தி யின்மையின். விததையினால் பாதிக்கப்படுதலின், அதன் சித்தி யெனின் அற் றன்று; அந்யோந்யாசிரய மாகலின். இத் தோஷங்கள் வஸ்துவினது வஸ்துத் தன்மையினை அபஹாரம் செய்வது. கல்பித அஞ்ஞானத்தினை இத் தோஷங்கள் என் செய்யுப்? ஸ்வயமே அதற்கு வஸ்துத் தன்மை யின்மையின். இதனாலேயே கூறப்பட்ட இது எங்கட்கு அலங்காரமே. எது யுக்திப் பிரமாணங்களினால் துர்க்கடத் தன்மை. ஸுகடத்தில (பொருத்த முடையதில்) கல்பிதத் தன்மை துர்க்கட மாகின்ற தெனக் கூறற்க; கல்பிதத் தன்மையே இதுவரை சித்தியாமையின். தர்மியே சித்தியாமையின்.

அற்றேல், இச் சித்தி யாது? உற்பத்தியா? ஞப்தியா? முதல தன்று, அநாதிக்கு அதன் அபாவம் இஷ்ட மாகலின். இரண்டாவ தன்று, சாக்ஷி சித்தத் தன்மையினால் அதன் அபாவ மாகலின். இங்ஙனங் கூறற்க, அஞ்ஞானம் ஸாக்ஷியினாற் சித்திக்கில், ஸாக்ஷிக்கு அஸங்கத் தன்மை பங்கம் வருதலினால் ஸம்பந்த மின்றியும் அப்பிரகாசக மாகலின். பாரமார்த்திக ஸம்பந்தம் இல்லாதிருக்கினும் கற்பித ஸம்பந்தம் இருக்கின்ற தென்னற்க; ஸம்பந்த ஸம்பந்திகளின் அந்ய தமம் கல்பக மாயின், ஆத்மாசிரயம், அந்யோந்யாசிரயம் கூடஸ்தத் தன்மையின் ஹாநி, அசங்கத் தன்மையின் நாசம், மோக்ஷாபாவப் பிரசங்கங்கள் யோக்யாநுஸாரமாகப் பிராப்த மாகலின். அவித்தையின் அத்தியாஸம் போன்று அதன் ஸம்பந்தாத்தியாசமும் அநாதி டாகலின். அவித்தையாதி ஹேது அஜந்யத் தன்மையிலும்.

அதன் நிமித்தத்தினால் அதன் நிவிர்த்தியால் நிவிர்த்தி
யாகின்றதெனக் கூறற்ச; உற்பத்தியில் அபேக்ஷை யின்றிய
அநாதி, சாக்ஷி யதீந ஞாநத்திற்கு, அஞ்ஞாந அநபேக்ஷை
யினால் அதன் தந்திரத் தன்மை யின்மையின். சம்பந்தி
ஞாநத்தின் அதீநமாய்ச் சம்பந்த ஞாநம் லோசத்தில பார்க்கப்
படுகின்றதெனக் கூறற்க; பிரத்தியக்ஷாதி சித்த அசற்கு
அதன் ஸாபேக்ஷையிலும் ஈண்டுச் சம்பந்தி யாய அஞ்ஞாநத்
திற்கும் சாக்ஷி சம்பந்த சாபேக்ஷ விளக்கத்தினால் விபரீத
மாகலின். சம்பந்தமானது தனது இருப்பின பொருட்டுச்
சம்பந்தியினை அபேக்ஷிக்கின்றதெனக் கூறற்க; ஸத்தை
யினை யடைந்த விளக்கத்திற்கே ஸ்திதி அபேக்ஷித்தலினா
லும், ஹேதுவின் அபேக்ஷை யின்றியதில், வேறு அபேக்ஷை
யின்றி யிருத்தலினாலும்.

கிரஹ (வீட்டின்) பிராகபாவ ரூப அஞ்ஞாநத்திற்குக்
கிரஹ அநுபலம்பத்தினால் உபலம்பம் எனக் கூறற்ச;
நித்திய உபலம்ப ரூப ஆத்மாவிற்கு அநுபலம்பம் பொருந்
தாமையானும், பாவ ரூப ஜகத்தின் உபாதாந ரூப அஞ்ஞா
நத்திற்கு, அபாவ ரூபத் தன்மை பொருந்தாமையானும்.
ஆகவே, அஞ்ஞாநமே யின்மையின் எங்ஙனம்? அது ஜகத்
காரணத் தன்மையினால் உபந்நியாசஞ் செய்யப்படுகின்றது.
(எனின்) அற்றன்று.

39. பிரசிநம் ஞாந பூர்வக மாகலின், ஆக்ஷேபத்தில்
பிரதியோகி ஞாநம் அவசியம் பூர்வ மிருக்க வேண்டும்.
அதனால், வேறு வகைத்தாயின் விரோத மாம்.



எங்ஙனம் அஞ்ஞாந சித்தி யெனக் கூறும் வாதியினைக்
கேட்க. இது அஞ்ஞாந ஸ்வரூபத்தினை விஷயமாக வுடைய
பிரசிநமா? அல்லது, அதன் ஸ்வரூப ஆக்ஷேபமா? அல்லது,
இது அதன் ஸ்வரூபத்தினைச் சாதிக்கும் பிரமாணப் பிரசிந
மேயா? முதலதில், அறியப்படாத ஸ்வரூபத்தில் பிரசிநம்
பொருந்தாமையின். கேள்வியின் பூர்வம் அஞ்ஞாந ஸ்வரூ
பத்தின் ஸித்தி அவசிய மாகலின், உனக்கே அஞ்ஞாந ஸ்வ
ரூபம் சித்த மாகலின், ஈண்டு பிரசிநம் ஏன்? ஸாமாந்ய
ஞாநத்தினால் விசேஷ ஜிஞ்ஞாஸை பொருந்துகின்றதென்
னற்ச; புகன்ற தோஷத்தினால். ஆக்ஷேபம் பொருத்த
மன்று; அபாவ ஞாநத்திற்குப் பிரதியோகி ஞாந பூர்வ
கத் தன்மை நியம மாகலின், அஞ்ஞாந ஸ்வரூப ஸித்தியின்
பூர்வமே யிருத்தலின். பிராந்தியினாற் சித்தித்த அஞ்ஞாநத்
தின் ஆக்ஷேபம் நியாய முடைத் தன்று; எதனால், யாரால்
யாண்டுப் பிராந்தி யெனக் கேட்கில், ஏனையோர் புகன்ற சப்
தாபாசத்தினால் அஞ்ஞாநத்தை விஷயமாக வுடையது என்
பதே உத்தர மாம். ஆகவே, பிராந்தியானது தனது ஸமாந
விஷயக அஞ்ஞாநத்தினை உபபாதிப்ப தாகலின். அஞ்ஞா
நத்தினை விஷயமாக வுடைய வேறு அஞ்ஞாநத்தினை யங்கீ
கரிக்கில், அநவஸ்தை நிவிர்த்திக்க ஒவ்வா தாம். ஆச்சரியம்!
ஆயின்; ஒரு அஞ்ஞாநத்தை ஸஹித்துக் கொள்ளாமையினால்
ஆக்ஷேபஞ் செய்யும், அநேக அஞ்ஞாந அங்கீகாரத்தில்
மதோந்மத்தராய், ஸ்வ வியாகாதம், கௌரவம், வையர்த்தி
யம் முதலிய தோஷங்களைப் பாராதவருக்குத் தனது பக்ஷ
நிர்வாக வியாகாதமே யாம். இங்ஙனம் சில விடத்து உமக்
கும் பிரசிநாக்ஷேபங்கள் இருத்தலின் கேள்வி சமாந மாம்
என்னற்க; அஞ்ஞாநத் தன்மையினால் சாக்ஷி ஸித்திக்கில்

அஞ்ஞாந நிவிர்த்தியின் பொருட்டுப் பிரமாணப் பிரசிநமும், பிரமாண அதர்சநத்தால் ஸ்வரூப திரஸ்கார ரூப ஆக்ஷேபமும் செய்தற்கு ஸுலப மாகலின். ஆயினும், நமக்கும் சாக்ஷியினிடத்து சித்தித்திருக்கும் அஞ்ஞாநத்தில் பிரமாணப் பிரசிநம் பொருந்துகின்றது. இங்ஙனம் அஞ்ஞாந ஸாக்ஷிகளின் ஸம்பந்தம் கூற வேண்டும். அந்யதா சாக்ஷியின் ஸாதகத் தன்மை பொருந்தாமையின். அங்ஙனமே, அஞ்ஞாந அதன் ஸம்பந்தங்கட்கு அநாதித் தன்மையும் கூற வேண்டும். அந்யதா பூர்வம் முக்தனானவனுக்கு இப்பொழுது ஸம்ஸாரத் தோற்றம் உண்டாம். முன்னரும் வேறு அஞ்ஞாநமே எனக் கூறற்க; அஞ்ஞாந பரம்பரையினும் ஒன்றற்கே லாகவத் தன்மை யிருத்தலின். அதுவும் எது எதனோ டின்றிப் பொருந்ாது, அது ஸர்வ ஸம்பந்தித் தன்மை, அநாதித் தன்மை, அநிர்வசநீயத் தன்மை, பாவ ரூபத் தன்மை, விசித்திர சக்தியினை யுடையதாந் தன்மை, ஏகத் தன்மை, அல்லது, வேறு எதனை அபேக்ஷிக்கின்றதோ, தனது உபபாதகத் தன்மையினால், எல்லாம் கல்பிக்கின்றன வென்றும் கூற வேண்டும். ஆகவே, பிராமணப் பிரசிநம் அநர்த்தகமே யாம்; அஞ்ஞாநம் ஸாக்ஷியினாலேயே ஸித்தித்தலின். அஞ்ஞாந விஷய, அஞ்ஞாந நிவிர்த்தியின் பொருட்டுப் பிரமாணப் பிரசிநம் பொருத்த மென்னற்க; அதன் அபாவத்தினாலும், அஞ்ஞாநம் பிரமாணத்தினால் அறிதற்கு அசக்கிய மாகலானும். அதனோடு அதற்கு விரோத மிருத்தலால். அவ் விது தமோ தீப நியாய மாம். அங்ஙன மன்றோ,

பிரமாணத்தினால் அஞ்ஞாநத்தினை யறிதற்கு இச்சிக்கும் அத்தியந்த மூட புத்தியினை யுடையவன், மிகுந்த பிரகாசத்தோடு கூடிய தீபத்தினால் இருளை நிச்சயமாக அறிவன்.



ஆகவே, அஞ்ஞாநம் எங்ஙனம் எனக் கேட்பவனை, ஆத்மாஞ்ஞாநத்தினை உபபாதிக்க என்பதால் தனது அநுபவத்தினால் சித்திக்கில் எங்ஙனம் என்பது பொருந்தாமையேயாம். ஆயின், எனக்கு முக்தி யெங்ஙனம்? கர்த்ருத்வம் முதலிய அசேஷ அநர்த்த ஸமூஹத்தினை பிறப்பிக்கும் பீஜ மாகிய ஆத்ம அஞ்ஞாநம் தனது அநுபவ சித்த மாகலின், தத் த்வமஸ்யாதி வாக்கிய ஜந்ய அபரோக்ஷ பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரத்தினால் அஞ்ஞாந பாதத்தினாலேயே யெனக் கிரஹிக்க.

அற்றேல், இப் பாதம் யாது? ஆண்டுச் சிலர் பூர்வ ஞாநத்திற்கு வ்யதிகரணப் பிரகாரத் தன்மை நிச்சயம் என்கின்றனர், அற் றன்று; அந்யதாக் கியாதி யங்கீகரிக்காமையானும், அஞ்ஞாநத்திற்குப் பாத மின்மைப் பிராப்தியானும். காரிய ஸஹித அஞ்ஞாந நிவிர்த்தி யென நம மதத்திற் சிலர் கூறுகின்றனர், அதுவும் விசார மின்றி ரமிக்கின்ற தாம். பிரத்தியேக ஸமுதாயங்களினால் வியாபிக்காமையின்.

மற்றும், இந் நிவிர்த்தி யாது? த்வம்ஸ மாத்திரமா? ஞாந ஸாத்தியமா? பதார்த்தாந்தரமேயா? ஆத்ம ஸ்வரூபமா? முதல தன்று, உலக்கையின் அடித்தலால் ஜநிக்கப்பட்ட கட முதலிய த்வம்ஸத்தில் அந்த வியவகார மின்மையின். இரண்டாவ தன்று, உத்தர ஞாநத்தினால் ஸாதிக்கத் தக்கதாய பூர்வ ஞாந த்வம்ஸத்தில் அத் தன்மைப் பிராப்தியானும், ஞாந மாத்திர த்வம்ஸத்தில் அதிவ்யாப்தியானும். மூன்றாவ தன்று, அது த்வம்ஸத்தில் வியாபிக்காமையினால். அது நிவிர்த்தி யாகாதிருக்கில் அத்வைதத்திற்கு நாச

மாகலின். நான்காவ தன்று, அது நித்திய ஸித்த மாகலின் ஞாநத்திற்கு வியர்த்தத் தன்மை வருதலின். ஆகலின், பாதமானது கூறுதற்கு அசக்கிய மாகலின், அஞ்ஞாந அதன் காரிய பாதத்தினுல் மோக்ஷ மென்பது யாங்ஙனம்?

ஈண்டுக் கூறப்படுகின்றது:—

40. அதிஷ்டாநத்தின் ஸாக்ஷாத்கார முண்டாயில், அதன் பின் "அத்தியஸிக்கப்பட்ட பதார்த்தங்கள் இன்" றென்னும் நிச்சயத்தினை பண்டிதர்கள் பாத மென்று கூறு கின்றனர்.

சுத்த மாகிய அதிஷ்டாநத்தில் விபரீதமாக அத்திய ஸித்துப் பிரவிர்த்திப்பதற்கும், அல்லது, நிவிர்த்திப்பதற்கும் எது அதிஷ்டாநத்தினை விஷயமாக வுடைய பாதக ஞாநம் பரோக்ஷம் அல்லது, அபரோக்ஷமாக உண்டாகின்றதோ, அதன் பின் "இது ஈண்டுக் காலத் திரயத்திலு மின்று" என்னும் நிச்சயமே பாதம் எனச் சர்வ ஜநங்களினது அநுபவ சித்த மாம். அந்யதாக் கியாதி வாதத்திலும் இவ் வர்த்தம் பொருளால் முடிவு பெறுதல் இருக்கின்றது என்னற்க; அம் மதத்தில் ஆண்டு அத்தியாஸம் செய்யப்பட்ட பதார்த்தங் கட்கு அந்யவிடத்து இருத்தல் அங்கீகரித்தலின். இங்ஙனம் பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்கார முண்டாயில், அஞ்ஞாநமும் அதன் காரியமாகிய வெல்லாம் எவ்வளவு ஆண்டு அத்தியாஸம் செய்யப்பட்டிருக்கின்றதோ, அவ் வெல்லாம் ஆண்டுக் காலத் திரயத்திலும் இல்லை யென்னும் நிச்சயம் தனது அநுபவ சித்த மாகின்றது. அதுவே, அதற்கு ஆண்டுப் பாதம் எனக் கூறப் படுகின்றது. இதனுனே, பிரதிபந்நஉபாதியில் நிஷேதப் பிரதி



யோகித்தன்மை, அநிர்வசநீயத்தன்மையென்னும் ஸம்பிரதா யத்தை யறிந்தவர்களது லக்ஷணமும் பொருத்த முடைத்தாம்.

உத்தர கால நிஷேதப் பிரதியோகித் தன்மை யிருக் கினும், வர்த்தமாந அதீத காலங்கள் இருத்தலின், த்ரைகா லிக நிஷேதப் பிரதியோகித் தன்மை அநிர்வசநீயத் தன்மை யின்று என்று கூறற்க; அநிர்வசநீயத் தன்மையின் ஞாந மின்மையினுல். ஒரு காலத் தன்மை மாத்திரத்தினுல் அநிர் வசநீயத் தன்மையாவ தில்லை. அந்யர்களால் கொள்ளப்பட்ட ஸத்திய மாகிய கடாதிகட்கும் அத்தன்மை யாகலின்.

அவித்தையின் காரியத் தன்மையினுல் விசேஷம் என்னற்க; காரணத்திற்கு வேறு பெயரிடுதல் பிராப்தி யாகலின். ஞாநத்தினுல் பாதிக்கப்படுந் தன்மையினுல் விசேஷ மென்னற்க; அந்தச் சத்திற்கும் இல்லை யென்னும் ஞாநம் பொருந்தாமையின். சகல காரிய காரண பாத ரூப இல்லை யென்னும் ஞாநம் பாதத்தின் பின் மித்தையாம். இங்ஙனம் கொள்ளாக்கால் அத்வைத ஹாநியாம் எனக் கூறற்க; பிரஹ்மத்தி னின்றும் அந்யமான எல்லாப் பாத ரூப அதற்குத் தனது அந்தர்பாவத்தினுலேயே அங்ஙன மாகலின். பிரஹ்மத்தி னின்றும் அந்யம் இருக்கின்றதா? இல்லையா? என்னும் விகற்பத்திற்கு இட னின்று; அநிர் வசநீயத் தன்மையினுல் பரிஹாரஞ் செய்திருத்தலின். அக் கியாதி, ஆத்ம க்யாதி, அஸத் க்யாதி, வாதங்களில் பிராந்தி யின் பாத விவஸ்தை பொருந்தாமை, அந்யதா க்யாதி வாதிக ளானே காண்பிக்கப்பட்டிருத்தலின். ஈண்டு யத்தநஞ் செய்யவில்லை. கிரந்த கௌரவ பயத்தினுலும், அநாத்ம விசார மாகலானும். ஆகலின், பாதக ஞாநத்தின் பின் அத்தியஸ்த

பதார்த்தங்கட்குத் த்ரைகாலிக, அஸத்வ நிச்சயம் பாதமெனச் சித்தமாம். அங்ஙனமே ஸுரேசுவரர், "தத் த்வமஸ்யாதி வாக்கியத்தினின் றுண்டாய நன் ஞான உபத்பத்தி மாத்திரத்தானே காரியத்தோடு அவித்தை இருந்ததும் இல்லை. இருக்கின்றதும் இல்லை. இருப்பதும் இல்லை." எனக் கூறியிருக்கின்றனர்.

அற்றேல், எங்ஙனம் வித்தைக்கு அவித்தையின் பாதகத் தன்மை? விரோத மிருத்தலின் எனின், ஆயின், அவற்றிற்கு விரோதம் யாது? ஒரு காலத்தில் இருக்குந் தன்மை யின்மையா? அல்லது, ஒரு தேசத் திருக்குந் தன்மை யின்மையா? அல்லது, பத்திய காதகத் தன்மையா? அல்லது, பாவாபாவ ரூபத் தன்மையா? முதல தன்று; முன்ன ரிருக்கும் அவித்தையோடு வித்தைக்கு ஒரு காலத் திருக்கும் தன்மையால் வித்தையின் பின்னர் அவித்தை நிவிர்த்தி யாகலின். இங்ஙனம் கொள்ளாக்கால் வித்தை வியர்த்த மாகலின். இரண்டாவ தன்று; வியதிகரண மாகிய வித்தை அவித்தைகட்கு விரோத மின்மையின், ஒரு அதிகரணத் தன்மை அவசியம் கூற வேண்டுதலின். மூன்றாவதில், பத்தியத்தின் காதம் (கோறல்) கூற வேண்டும். எதன் கர்த்ருத் தன்மை, காதகத் தன்மை, த்வம்ஸம், காதம், அதன் கர்த்ருத் தன்மை காதகத் தன்மை யெனின், ஆயின், அது பந்தியத்தி னின்றும் பிந்நமாக ஒரு ஸ்வதந்திர பதார்த்தமா? அல்லது, அதன் தர்மமா? அல்லது, அதன் ரூபமா? முதலதில், பந்தியத்திற்கு த்வம்ஸ முண்டாகாது. இமய மலை விந்தியாசலங்கள் போன்று பரஸ்பர ஸம்பந்த மின்மையின். இரண்டாவதில், தர்மமே தர்மிக்குத் தீர்க்காயுளைக் கொண்டுவந்து கொடுக்கும். அங்யதா, ஆசிரய மின்றி



தர்மமே இராதாம். மூன்றாவதிலோ, வித்தை அவித்தையினை உண்டாக்குவதேயாம். ஆகலின், விரோதம் யாங்ஙனம்? நான்காவ தன்று, வித்தை அவித்தை யென்னும் இரண்டும் பாவ ரூப மாகலின். அவித்தைக்குப் பிராகபாவ ரூபம் நிவிர்த்தி செய்யப்பட்டிருத்தலின். அங்யதா ஒரு காலத் திருத்தல் பொருந்தாது. ஆகலின், வித்தை அவித்தைகளின் விரோதம் கூறுதற்கு அசக்கிய மாகலின். வித்தைக்கு அவித்தையின் பாதகத் தன்மை யாங்ஙனம்? அல்லது, விபரீதம் ஏன் உண்டாகாது?

ஈண்டுக் கூறப்படுகின்றது:—

41. நாச மாகும் ஸ்வபாவத் தன்மை அவித்தைக்காம். நாச மாக்கும் கர்த்ருத் தன்மை வித்தையின் விரோதித் தன்மை யாம். பிரகாச தமஸுக்கட்குப் போன்று.

வேறு விரோதம் ஈண்டுக் கூறுதற்கு ஸமர்த் தின்றாயினும், உபமர்த்ய உபமர்த்தக (நாச மாதல், நாச மாக்குதல்) பாவ லக்ஷண இவ் விரோதம் கூறுதற்கு ஸமர்த்தமேயாம். அவித்தையினை உபமர்த்தகஞ் செய்யும் வித்தையின் ஸ்வபாவம் அந்வய வியதிரேகங்களால் லோகப் பிரசித்த மாகலின்.

விரோதித் தன்மை ஸமானத்தில் வித்தையின் உபமர்த்தகத் தன்மையே அவித்தைக்கு ஏன் உண்டாகாது என்று கூறற்க; அங்ஙன மாயின், வித்தையின் உத்பத்தியே யுண்டாகாது. உபமர்த்தகஞ் செய்யும் அவித்தை முன்னரே யிருத்தலினானும், நியத ஸ்வபாவத்திற்கு எதிர்த்துக் கேட்டற்கு

அஸமர்த்த மாகலானும். பிரகாச தமஸுக்கள் போன்று. ஆண்டு, விபரீதத் தன்மை ஸங்கித்தற்கு ஸமர்த் தின்று; திருஷ்ட விரோதி யாகலின். பத்திய காதக பக்ஷத்திற் கூறிய தோஷப் பிராப்தி யின்று; காலத் திரயத்திலும் இன்று என்னும் உபமர்த்த பாத மென்னும் வேறு பர்யாயத்தினை யுடைய பிரமிதி ரூபம் வித்தையின் பின் உண்டாகுதலின்.

அற்றேல், அவித்தையின் உபமர்த்தக ஸ்வபாவத் தன்மை வித்தைக்கு எனின், ஆயின், வித்வான்கள் வித்தையின் உத்பத்தியின் பின் காரியததோடு மூல ஸஹிதம் வியாதி நிவிர்த்தித் திருத்தலின், அப்பொழுதே விதேக கைவல்யப் பிராப்தியில் தேக பாதமானது அக் காலமே யாம். ஆகவே, ஸம்பிரதாயம் நாசமாம். பிராரப்தத்தின் ஸாமர்த்தியத்தினுல் தேகம் வீழ்தல் இன் றெனக் கூறற்க; பிராரப்தமும் அவித்தையின் காரியத் தன்மையால் அதன் அபாவத்தில் நூலின் அபாவத்தில் படம் போன்று இருத்தற்கு அசக்கிய மாகலின். பிராரப்த கர்ம, பல போக நிர்வாகத் தன்மை யினுல் சில காலம் அவித்தையு மிருக்கின்றது என்று கூறற்க; வித்தைக்கு அவித்தையின் உபமர்த்தகத் தன்மை ஸ்வபாவத்திற்கு ஹாநி வருதலின். உத்தர காலத்தின் கண்ணே அவ்வித ஸ்வபாவம் என்று கூறற்க; ஒன்றற்கு இரு ஸ்வபாவம் அங்கீகரியாமையின். ஆவரண சக்திப் பிரதாநமாகிய அஞ்ஞாநம் நிவிர்த்தியே யாகின்றது, விக்ஷேப சக்திப் பிரதாநமோ பிராரப்த நிர்வாகத்தின் பொருட்டு, அநுவர்த்திக்கின்றது என்று கூறற்க; அஞ்ஞாந மிரண்டின் மையின். ஒன்றே இரண்டு சக்தி விசிஷ்ட மன்று; ஒன் றற்கு ஒரே காலத்தில், ஸ்திதி நிவிர்த்திகள் விருத்த மாக லின். சக்தியின் நிவிர்த்தி மாத்திரமே அபிப்பிராய மன்று;



சக்தி, சக்தி யுடையவற்றிற்கு அபேதத்தால், அல்லது, பேதத்தில் அஞ்ஞாநம் நிவிர்த்தியாகாது.

பிராரப்த நிவிர்த்தியினுல் அதன் நிவிர்த்தி யன்று; பிராரப்த நிவிர்த்திக்குப் பிரமாண மின்மையின். அதன் பின், பிரதிபந்தக மின்றிய ஞாநமே, அதனை நிவிர்த்திக் கின்றது என்று அரையற்க; பிராரப்த நாச மாகுங்கால் தேகம் விழுந்ததன் பின் ஞாநமே யின்மையின். முன் ஞாநம் பிராரப்தத்தினுல் பிரதிபந்த மாகலின். அவித்தை யின் ஸம்ஸ்காரம் லேச அவித்தியா சப்த அபிதேயமாய் அநுவர்த்திக்கின்றது என்று சழறற்க; அதுவும் அவித்தை யின் காரிய மாகலின். அவித்தியா மாத்திரத்திலும் ஸம்ஸ் கார சப்தப் பிரயோகம் வியர்த்த மாகலின். ஜீவந் முக்தி யினைப் பிரதிபாதிக்கும் சுருதி ஸ்மிருதிகளின் பிராமாண் யத்தினுல் வித்வான்களினது தேகத்தின் ஸ்திதி கல்பிக்கப் படுகின்ற தெனின், அற் றன்று; சாஸ்திரத்திற்கு ஜீவந் முக்தியினைப் பிரதிபாதிப்பதில் பிரயோஜந மின்மையின்.

சிரவணம் முதலியவற்றில் முமுக்ஷுக்களின் பிரவிர்த்தி பிரயோஜநம் எனின், இருக்குக. ஆயின், சிரவணுதி விதி அர்த்த வாத மாம். ஆகவே, அச் சாஸ்திரம் லௌகிக வைதிகப் பிரமாண விரோதத்தினுல், அதனுல் எங்ஙனம்? வித்வானது தேஹத்தின் ஸ்திதி கற்பிக்கப்படுகின்றது. முக்தர்களி னிடத்தில் திருஷ்டாந்தத்தினுல் பிராரப்தத் தின் ஸ்திதியினை சாதிக்கின்றது என்று புகலற்க; திருஷ் டாந்தத்தில் விஷமத் தன்மையால். ஆண்டுக் கர்மோபாதாந மாகிய பாணம் நாச மாகாமையின். ஜீவந் முக்த னிடத்தில்

சர்வ லௌகிகப் பிரசித்தி வியாகாத மின்றி யிருக்கின்ற தென்னற்க; பிரமாண மின்மையால், பிரசித்தியானது அந்த பரம்பரா ரூப மாகலின். அப்ராமாண்யத்தினை சாஸ்திரக்காரர்களால் கூறப்படுதல் அநர்த்தகம் என்று கூறற்க; சிஷ்யன் அவித்வா னுகலின். குருவினிடத்தில் அவிசுவாஸப் பரிகாரப் பிரயோஜநத்தினுல், அது அர்த்த முடைய தாகலின். ஆகலின், வித்தைக்கு அவித்தையினை நாசஞ் செய்யும் ஸ்வபாவ மாகலின், வித்வா னுக்கு அப்பொழுதே முக்தி யுண்டாயில் உபதேசிப்பவ ரின்மையால் வித்தையின் உத்பத்தி யாங்ஙனம்? ஆசாரியரின் அபேக்ஷை யின்றியே வித்தை யுண்டாகின்ற தென்பது பொருத்த மன்று; "ஆசாரியரை யுடைய புருஷன் அறிகின்ருன்.", "இப் புத்தி தர்க்கத்தால் அடையத் தக்க தன்று.", "சிரேஷ்டத்தினை யடைந்து விழிக்கின்ருன்.", "ஆசாரியர் உனது கதியினைக் கூறுவர்.", "அந்யர்கள் கூருத விடத்து கதி ஈண் டின்று.", "அந்யர்களானே கூறப்படின், நல்ல ஞாநத்தின் பொருட்டுப் பிரவிர்த்திக்கின்ருன்." என்பன வாதி சுருதிகளால். இது தோஷ மன்று.

42. கல்பிதசாலும் உபதேசித்தல் பொருந்தும். சாஸ்திர முபதேசித்தலின். விநிகமக மின்மை தோஷ மன்று; அவித்தை யுடையதாந் தன்மையினுல் நிர்ணயித் தலின்.

வித்வான் அப்பொழுதே முக்த னுகலின், பாரமார்த் திக மாகிய ஒரு ஆசாரியர் இன்ரு மாயினும், கல்பித ராகிய குருவால் வித்தையின் உத்பத்தி பொருந்துதலின், ஒரு



காலத்தும் பொருத்த மின்மை யின்று. கல்பிதனுக்கு எங்ஙனம்? சத்திய ஞாநத்தினை யுண்டாக்குந் தன்மை யென்று உரையற்க; சாஸ்திரம் போன்று பொருந்துத லானும், பிரதிபிம்பம் போன்று மாம். குரு சிஷ்யர்களுள் எவர் கல்பிப்பவர் என்னும் விநிகமகம் இன்மை, தோஷம் என்று சாற்றற்க; அவித்வான் கல்பிப்பவ னுகலின். குரு வாகிய வித்வானுக்குக் கல்பனையின் பீஜ மின்மையின்; தத்வம் பொருந்தாமையின். ஆகலின், சாஸ்திர ஆசாரிய பிரஸாதத்தினுல் சாதிக்கப்பட்ட, தத் த்வமஸ்யாதி வாக் கியங்களினின் றுண்டாய சாக்ஷாத்காரத்தினுல், மோக்ஷத்தின் ஆவிர்ப்பாவப் பிரபந்தக மாகிய அஞ்ஞாந அதன் காரியங் களின் திரஸ்காரத்தின் பின், நித்திய சுத்த முக்த ஸ்வபாவ அத்விதீய ஆநந்தனு யிருக்கின்றேன் என அங்கீகரிக் கின்றனன், அதனுல் கிருத கிருத்ய னுகின்ருன். இதனு லேயே, "ஆத்மாநந்தத்தினை ஸாக்ஷாத் நிச்சயித்து" என நன்கு கூறப்பட்டது. "விஞ்ஞாநம் ஆநந்தம் பிரஹ்மம். இவ் வாகாசம் ஆநந்த மன்ருயின், எவன் சேஷ்டிப்பன்? எவன் பிராணநம் செய்வன்? இது ஆநந்தத்தின் விசார மாம்." என ஆரம்பித்து, இப் புருஷ னிடத்தில், ஆதித்ய னிடத்தில் யாது, அது ஒன்று. இது பரியந்தம். பிருகு வருணனது புத்ரன் என ஆரம்பித்து, ஆநந்தம் பிரஹ்ம மென அறிந்தான் என்பது பரியந்தம். எது பூமா, அது ஸுகம். அல்பத்திற் ஸுக மின்று" என்பதாதி சுருதி நூறுகளாலும். "அரே! பதியின் காமத்தின் பொருட்டுப் பதி பிரிய மாவ தில்லை. ஆத்மாவின் காமத்தின் பொருட்டுப் பதி பிரிய மாகின்ருன்." என ஆரம்பித்து, "அரே! எல்லா வற்றின் காமத்தின் பொருட்டு எல்லாம் பிரிய மாவ தில்லை.

தனது காமத்தின் பொருட்டு எல்லாம் பிரிய மாகின்றது." என இது பரியந்தமாக, ஆத்மாவின் பரமாநந்த ரூபத் தன்மை கூறி யிருத்தலினாலும்.

அற்றேல், ஆநந்தத் தன்மை முதலிய தர்மங்கள் ஆத்மாவி னிடத்து இருக்கின்றதா? இன்று? முதலதில், அவை சத்தியமா? அசத்தியமா? முதல தன்று; த்வைதப் பிராப்தியாம். இரண்டாவ தன்று; தர்மிகட்கு ஆநந்தத் தன்மை யின்மைப் பிராப்தியான். இரஜதத் தன்மை யாண்டு ஆரோபிக்கப்படுகின்றதோ, அது ரஜத மன்று. ஆநந்தத் தன்மை யின்மை, ஆநந்த பிந்நத் தன்மை யாம், அதுவும் இன்று என்று புகலற்க; அங்ஙன மாயினும், ஆநந்த ரூபத் தன்மை ஸித்தியாமையின். இரண்டாவ தன்று; ஆநந்தத் தன்மை யின் ஆசிரய மின்றியதில், ஆநந்த வியவகாரம் பார்க்கப்படா மையின. சர்வ வியவகார அதீத மாகிய அலௌகிகமே இவ் வாநந்தம் என்னற்க; லௌகிக வைதிக பதார்த்தங் கள் ஒன்றாகலின். இங்ஙனங் கொள்ளாக்கால், லோக வேதாதி கரண விரோத மாம். வாக்கியார்த்தத்தினாலேயே இவ் வாநந் தம் அன்று; அதனாலும், ஆநந்தத் தன்மை பிரதிபாதிக்கப் படாமையின். அகண்டத்தின்கண்ணே தாத்பரிய மாகலின். எவ் விதத்தும் அலௌகிக ஸுகத்தில் ஒருவருக்கும் இச்சை பொருந்துவ தில்லை. ஸ்வர்க்காதிகளும் லௌகிக ஸுக ஸஜாதீய மாகலின்.

ஈண்டுச் சிலர், ஆநந்த மின்மையின் வியாவிர்த்தி மாத் திரம் ஆநந்தத் தன்மை யாம். பிரசித்த ஆநந்தத்தின் கண்ணே யன்று. ஆத்மாவிற்குத் தர்ம தர்மி பாவம் அங்கீ



கரிக்காமையின். வியாவிர்த்தியானும் த்வைதப் பிராப்தி யன்று; அது ஆசிரயத்தின் வேறாகாமையின். இதனால், ஞாநத்வாதிகளும் வியாக்யாநஞ் செய்யப்பட்டதாம். அற் றன்று; வியாவிர்த்தி பதார்த்த மன்றாகலின். அபோஹ வாதப் பிராப்தியானும். வியாவர்த்தக தர்மம் அவசியம் கூற வேண்டுதலானும். அந்யதா, வியாவிர்த்தி சித்தியாமையின்.

ஸ்வரூபத்தானே வியாவிர்த்தி யன்று; ஆத்மா வியா வர்த்த மன்றாகலின். அந்யதா, அப்பிரஹ்மத் தன்மைப் பிராப்தியான்.

அந்யர்களோ, ஆநந்தத்வாதி தர்மங்கள் யாண்டுக் கல்பிக் கப்பட்டனவோ, அவைகளே ஆநந்தாதி பதார்த்தங்களாம். லோகத்திலும் பிரசித்தங்களாம். ஆண்டும் ஆநந்தத்வாதி கள் கல்பித மாகலின். இதனால், ஆநந்தத்திற்கு ஒரு க்ஷதியு மின்று; தர்மம் அநுபாதேய மாகலின். அதன் ஆசிரய வியக்தியே இச்சிக்கத் தக்கதாகலின். (எனக் கூறுகின்றனர்.) அதுவும் அவிசாரத்தால் ரமிக்கத் தக்கது போன்று விளங்கு கின்றது. விசிஷ்டமே ஆநந்த பதார்த்த மாகலின். வியக்தி மாத்திரத்தில் அது பொருந்தாமையானும். கல்பித ஆநந்தத் தன்மை ஆசிரயத்திற்கு ஆநந்த மின்மைத் தன்மைப் பிரசங்கம் நிவிர்த்தியாகாமையானும்.

எத் தர்மம் எவ் விடத்து ஸ்வாபாவிக மன்று, அதனுள் ளடங்கிய பதார்த்தம் அது வாவ தில்லை. அந்யதா, சுக்தி முதலியவற்றிற்கும் ரஜத பதார்த்தத் தன்மை பிராப்தியான்.

ஈண்டுக் கூறப்படுகின்றது:—

43. உபாதி ஆசிரயம் ஆத்மா. அதன் ஆசிரயம் அநந்தத் தன்மை யாம். விசிஷ்ட சக்கிய பக்ஷத்தின்கண்ணே வியக்தி சக்தி கோசர மாம்.

லோகத்தில் ஆநந்தத் தன்மை விசிஷ்டத்திலே ஆநந்த பதார்த்த மாயின், அப் பொழுதும் ஆத்மாவே ஆநந்த பதார்த்த முக்ய மாம். அநேக உபாதிகளில் பிரவேசித்திருக் கும் ஒன்றற்கே அநுகத வியாவிர்த்தி புத்தியினை யுண் டாக்குதலால், ஜாதி வியக்தி என்னும் இரு ரூபத் தன்மை பொருந்துதலின். எங்ஙனம்? சர்வ கல்பனையு மின்றிய முகம் சந்திரன் முதலிய ஒரு ஸ்வரூபத்தின்கண்ணே, பிம்பப் பிரதிபிம்ப ஸ்வரூப மென மூவித வியவகாரம் உபாதி பிரவேசித்து ஆரோபத்தின் பின் பார்க்கப்படுதலின். என லக்ஷண ஸ்தலத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

அல்லது, வியக்தியே யாண்டும் பத சக்தி கோசர மாகுக. வியக்திகள் அநந்த மாகலின் பத சக்தி சம்பந்த வியபிசார தோஷப் பிரசங்கம் இன்று; விசிஷ்ட சக்கிய பக்ஷத்திலும் சமாந மாகலின். விசேஷண அபேதத்திலும் விசேஷ்ய பேதத்தினால் ஒவ் வொரு விசேஷ்யத்திலும் விசிஷ்டம் பேத மாகலின். ஆகலான், அசக்கிய மாகிய சக்கியாதவச்சேதகத்தினாலும் அநுகத மாகிய சக்கிய வியவகாரம், அசக்கிய வியாவிர்த்தி வியவகாரங்களை யுண் டாக்குதற்கு சமர்த்த மாகலின்.



ஆண்டும், சக்தி கல்பநத்தில் பிரமாண மின்மையின். காரண ஸ்வரூபத்தி னின்றும் பஹிர் பூதமாகக் காரணத் தன்மையின் அவச்சேதகம் போன்று. அதனால், ஆநந்த ரூபத் தன்மையில் ஆத்மாவிற்கு ஒருவிதப் பொருத்த மின்மையு மின்று.

44. ஆபூர்வாதிப் பிரமாணங்களினாற் கூறப்பட்ட, சத்து சித்து அத்வைத தத்துவ மாகிய ஆநந்த ரூப ஆத்மா வினை நா னடைந்து அதன் சரீர மாக இருக்கின்றேன்.

45. எந்த நான் அத்வய வஸ்துவாகவே யிருக்கின் றேன். இரண்டாவதில் திட நிச்சய முடையவனா யிருக் கின்றேன். ஆநந்த ரூப ஆத்மாவினை யடைந்து அந்த நான் அத்வய விக்கிரஹமா யிருக்கின்றேன்.

46. சதா ஆநந்தம் பிரஹ்மம் இன்று; என எனது துர்ப் புத்தி யிருந்தது. அது எங்குச் சென்று விட்டதோ, யா னறியேன். எப் பொழுது நான் அதன் சரீரமா யிருக்கின்றேன்.

47. பூர்ணாநந்த அத்வய தத்வமாய போதத்தில், மேரு முதலிய ஜகத்தின் ஆகிருதி அஞ்ஞானத்தினால் செய் யப்பட்டே யிருக்கின்றது. இப் பொழுது அஞ்ஞானம் எங்குச் சென்று விட்டதோ?

48. ஸம்ஸார ரோகத்தால் கவரப்பட்டு, துக்கக் கூட் டத்தோடு கூடியது போன்று அஞ்யன் இருக்கின்றான். ஆத்ம ஞானத்தின் விழிப்பினால் நான் ஆநந்த சமுத்ரமாக விருக்கின்றேன்.

49. எந்த நான் அற்ப விஷயத்திலும் ராக முடையவனுய், அதிக துன்பத்தினை யடைந்தேன். ஆநந்த ஆத்மாவினை யடையுங்கால் அந்த ராகம் இப்பொழுது எங்குச் சென்று விட்டதோ?

50. ஜகத்தின் கர்த்தா காரியங்களினுல் எனக்கு மறைக்கப்பட்டு விளங்கினர். ஆநந்த ஆவிர்ப்பாவத்தோடு கூடிய ஆத்மா சுருதியின் பலத்தால் அடையப்பட்டது.

51. பராமர்சிப்பவனு யிருந்தாய். அடைபவனு யிருந்தாய். வெகு காலம் ஏவுபவனு யிருந்தாய். இப்பொழுது உன்னை நான் அடைந்தேன். ஒருகாலும் விடமாட்டேன்.

52. நீயின்றி நான் ஸ்வரூப மற்றவனுவன். நான் இன்றி நீ எங்ஙனம் இருப்பாய்? திருஷ்டியினுல் இப்பொழுது என்னுல் அடையப்பட்டது. எப்படி யிருக்கின்ருய், அப்படி யிருக்கின்ருய். உனக்கு நமஸ்காரம்.

53. அஞ்ஞாந மென்னும் பெயரை யுடைய திருடர்களால் தேஹாபிமாந கயற்ருல் கட்டப்பட்டு வெகு காலமிருந்தேன். உனது தரிசநத்தினுலே பந்தநம் க்ஷணத்தில் குறைந்தது.

54. விசுத்தனு யிருக்கின்றேன். விமுக்தனு யிருக்கின்றேன். பூரணத்தினின்றும், பூர்ண தம சரீரத்தோடு கூடி யிருக்கின்றேன், எனது ஆத்மாவினை ஸ்பரிசியாது உள்ளில் பிரஹ்மாண்டகோடிகள் இருக்கின்றன.



55. தத் த்வமஸ்யாதி வாக்கியக் கூட்டங்கள் முன்னர் அநேகம் மறைக்கப்பட்டிருந்தன. இப்பொழுது அதன் சிரவணத்தினுலேயே பூரணுநந்தனு யிருக்கின்றேன்.

அற்றேல், பூர்ணுநந்த ஸ்வபாவ முடையது ஆத்மாவாயின், சம்சார அவஸ்தையில் ஏன் விளங்க வில்லை? பரப் பிரமையின் ஆஸ்பதத் தன்மையினுல் ஆத்மாவின் விளக்கமே ஆநந்த ஸ்வரூபத்தின் விளக்கம் என்றெ கூறற்க; அவ்வித அபிமாந மின்மையின். மோக்ஷாவஸ்தையில் எவ்வித ஆநந்த ஸ்வரூபத் தன்மை ஆத்மாவிற்குக் கேட்கப்படுகின்றதோ? "இந்த ஆநந்தத்தினது மாத்திரையினையே அந்ய பூதங்கள் ஜீவிக்கின்றன." என்பதாதி சுருதியால், அவ் வித ஆநந்த அபிமாநம் ஒருவருக்கு மின்று. "ஆநந்தம் பிரஹ்மத்தினது ரூபம். அது மோக்ஷத்தில் இருக்கின்றது." என மோக்ஷத்தின்கண்ணே அதன் வெளிப்படுதல் கேட்கப்படுதலானும். ஸம்ஸார அவஸ்தையில் பிரதிபந்த மிருத்தலின் ஆநந்த ரூபத் தன்மை விளங்கினும் அபிமாநிப்பதில்லை யெனின்; ஆயின், பிரதிபந்தம் யாது? அஞ்ஞாநமா? அதன் காரியமா? முதலதில் ஜீவனுக்கா? பரனுக்கா? இரண்டாவ தன்று; நிரவத்ய னுகிய ஸர்வஞ்ஞனுக்கு அஃதின்மையின். முதல தன்று; அவனுக்குப் பரனேடு அபேத மிருத்தலின். "இவனினும் அந்ய திருஷ்டா இன்று." என்பதனுல் ஜீவாத்மாவோடு "தத்த்வமஸி." "அயம் ஆத்மா பிரஹ்மம்" என்பன வாதி சுருதிகளால்.

ஜீவனுக்கும் கல்பனை மாத்திரத்தினுலே அஞ்ஞாநமாம். உண்மையி லின்று எனக் கூறற்க; பரமாத்மாவி னிடத்தி

னும் வருதலின். சிங் மாத்திரத்தி லுள்ள அஞ்ஞானம் எல்லா ரூபத்தாலும் பிரதிபந்திக்கின்ற தென்னற்க; ஸம்ஸார அவஸ்தையில் பிரதிபந்த மின்றிய ஆநந்தம் இன்றேயாயின் எதன் பிராப்தியால் பிரதிபந்த நிவிர்த்தி யுண்டாகின்றது? ஸம்ஸாரிப் பிராப்தியினால் ஸம்ஸார நிவிர்த்தி பொருந்துவ தில்லை.

பிரதிபந்த மின்றிய ஆநந்தம் ஸம்ஸார அவஸ்தையிலு மிருப்பதே யாம். கேவலம் அஞ்ஞானத்தி னுண்டாய த்வைதத்தினுட் கிடக்கும் சப்தாதி விஷயங்க ளாகிய விஷத்தோடு கூடினவனாய், அதனைப் பார்த்தலில மிக ஆசை யுடையவனாய், அதனைப் பார்க்குங் காலத்திலும் அந்திய பாவனையினா லுண்டாய விஷய படிசனால் (தூண்டில் போடுபவனால்) இழுக்கப்பட்ட ஹிருதயத்தை யுடையவனாய், பரமப் பிரிய தமமான ஜகதீசுவரன் ஸர்வ அங்கங்களும் கூடியிருத்தலினால் அதி சமீப மாயினும், ஆத்மாவினைப் பார்த்தற்கு க்ஷணங் கிடைக்காதவனாய்த், தனது கழுத்திற்குமே லிருக்கும் முகத்தில் கழுத்தணி முதலிய ஸம்பந்தங்களில் நிச்சய மின்மை போன்று, நிச்சய மின்மை மாத்திரம் ஆத்மாவி னிடத்துப் பிரதிபந்த மாம். உண்மையாகப் பிரதிபந்த மின்று என்று கூறற்க; அதன் தரிசந ரூபப் பிரதிபந்தத்திற்கு ஆசிரயத்தினை நிச்சயிக்கும் ஸாமர்த்திய மின்மையின். அங்ஙன மன்றோ, இத் த்வைதத்தினைப் பார்ப்பவன் யார்? பரமாத்மாவா? அல்லது, ஜீவனா? அல்லது, வேறு அந்யனா? முதல தன்று; சர்வஞ்ஞ னாகிய அவனுக்குப் பிராந்திக்குப் பீஜ மாகிய அஞ்ஞாந மின்மையின், த்வைத தரிசநம் பொருந்தாமையின். எவனுக்கு அஞ்



ஞாநம், பிராந்தி, அந்தப் பிராந்தனுக்கு அது நன் கறியப்படுகின்றது. என்னும் நியாயத்தினால், அஞ்ஞாநம் மித்தியா ஞாநம் நன் ஞாநங்கட்கு ஸமாநாதிகரணத் தன்மை நிச்சயத்தால், அவித்தை யுடையவனுக்கு அது பொருந்துதலின். ஆயின், அவித்தையினை யுடைய ஜீவனுக்கு த்வைதத்தினை யறியுந் தன்மை யிருக்குக. அவனுக்கு அன்று; பரனோடு அபேதம் கூறி யிருத்தலின். அபேதத்திலும் பிம்பப் பிரதிபிம்ப வியவஸ்தையினால் ஸர்வஞ்ஞத் தன்மை, த்வைத திருஷ்ருத் தன்மைகள் பொருந்துகின்ற தென்னற்க; வைஷம்ய மாகலின்.

ஆண்டு, முன்னர்ச் சித்தித்த வுபாதியில் பிம்பப் பிரதிபிம்ப பாவத்தின் பின் தோற்றும், மலிநத் தன்மை, ஸ்வச்சத் தன்மைகள் வியவஸ்தையினால் உபபத்தி பொருத்தமாம். ஈண்டோ, த்வைத திருஷ்டியினால் உண்டாக்கப்பட்ட த்வைதமே உபாதியினால் அதன் அநுப்பிரவேச மாகலின், பிம்பப் பிரதிபிம்ப பாவ கல்பனையில் அதன் பூர்வம் திருஷ்டாவின் வியவஸ்தாபகம் பொருந்தாமையின். அநாதி சித்த அஞ்ஞாநப் பிரதிபிம்பமும் அநாதியால் அதன் பூர்வம் என்னும் பர்யநுயோகம் (எதிர்த்துக் கேட்டல்) பொருந்தா தென்று கூறற்க; அநாதி சித்த அஞ்ஞாந திருஷ்டாவிற்கும் அநாதி சித்தமே கூற வேண்டும். அது கூறுதற்குச் சக்கிய மன்று. சாக்ஷியே அங்ஙன மென்னற்க; ஸர்வஞ்ஞனாகிய அதற்குத், தனது அவித்தை யின்றி, அதன் திருஷ்ருத் தன்மை பொருந்தாமையின். ஸர்வஞ்ஞனுக்கும் அந்ய அவித்தையின் திருஷ்ட்ருத் தன்மையினால் விரோத மின்றென்ப தின்று; தனது பிந்ந அவித்தையின் திருஷ்ருத்

தன்மையினல் பரமாத்மாவிற்குப் பிராந்தத் தன்மை வருதலினுலும், "இதனினும் அந்ய திருஷ்டா யின்று" என்னும் சாஸ்திர விரோதத்தினுலும். ஸர்வஞ்ஞத் தன்மை ஸ்வரூப சைதந்யத்தினுல் தன்னிடத்தி லத்தியஸ்த ஸகலத்தையும் விளக்குந் தன்மையாம். அதுவும் அவித்தையுடையவ னிடத்தும் விரோத மின்று என்று புகலற்க; "நிரவத்யம் நிரஞ்சநம்" என்னும் சுருதியினுல், அவித்தையும் ஆண்டு நிஷேதிக்கப்பட் டிருத்தலின். வஸ்து ரூப அவித்தையின் நிஷேதமாம். கல்பித அவித்தையின் நிஷேதமு மன்று என்று அரையற்க; சாதாரண நிஷேதத்தினுலும், வஸ்து ரூப அவித்தையின் பிரஸித்தி யின்மையானும். ஜீவனும் அவித்தையின் பின் உண்டானமையின், அநாதித் தன்மை பொருந்தாமையின். அந்யதா, அவித்தையின் நிவிர்த்தியினுனும் ஜீவ பாவம் நிவிர்த்தி யாவ தில்லை. மூன்றுவ தன்று; ஜீவ பரமாத்மாக்களின் அந்யமாயவெல்லாம் ஜட மாகலின், திருஷ்ட்ருத் தன்மை பொருந்தாமையின்.

இரண் டிடத்தும் அநுகதமாய சித் சாமாந்யத்திற்கே திருஷ்ட்ருத் தன்மை யென்று கூறற்க; அங்ஙன மாங்கால், அவித்தையும் ஆண்டே கூற வேண்டுதலின். நிரவத்யனுப் பிராந்தி யின்றிய ஜீவனுக்குப் பரமாத்மா போன்று நித்திய முக்தத் தன்மை, ஸர்வஞ்ஞத் தன்மை முதலியன பிராப்தியாம். மூ வித விபாகம் உபாதி சித்தியின் உத்தர காலீநமாகலானும். அவித்தையை யங்கீகரியா தொழியில், அதனை விஷயமாக வுடைய பிரசிந, ஆக்ஷேபங்கள் பொருந்தாமையின். கேட்கும், அல்லது, ஆக்ஷேபிக்கும் உனக்கே அவித்தையின் திருஷ்ட்ருத் தன்மை பொருத்தம் என்று கூறற்க; அந்த அவித்தையின் திருஷ்டாவின் ஸ்வரூபமே எனக்கும் இப்பொழுது உன்னல் தத்துவ நிர்ணயத்தின் பொருட்டுக் கூற வேண்டுதலின். நீ உனது ஆத்ம ஸ்வரூபத்தினையும் அறியாய். நான் இதனைக் கேட்கின்றேன் என, அதற்கு உனது பிரசிநமே எங்ஙனம்? என்று கூறற்க; பிரசிநத்தின் விஷயம் அறியா திருக்கினே பிரசிநம் பொருந்துதலின். அந்யதா, கேட்கப்படும் அர்த்த ஞாநாஞ்ஞாந விகல்பத்தினுல் பிரசிநமின்மையின். "கேட்கப்படாததை ஒருவருக்கும் கூறற்க; அந்யாயத்தினுல், கேட்டும் கூறற்க; அறிந்திருக்கினும் மேதாவி புருஷன் ஜடம் போன்று லோகத்திற் சஞ்சரிக்க." என்னும் நியாயத்தினுல். தானே கூறுதற்கு அசக்கியத் தன்மை எல்லாச் சாஸ்திரங்களும் அரண்ய ருதித மாம்.



பிரசிந விஷயத்தினை அறியா திருக்கில் எங்ஙனம் அதனை விஷயமாக வுடைய சப்தத்தினை சிருஷ்டித்தல்? ஸம்ஸர்க்கத்தினை யறியாது சப்தத்தினை சிருஷ்டித்தலின் பிரசித்தி யின்று என்று கூறற்க; ஸ்தோப சப்தம் போன்று அர்த்த ஸஹித சப்தத்திற்கும் அதன் ஸ்வரூப ஞாநத்தினுனே சிருஷ்டி பொருந்துதலின். யாண்டும் சப்த ஸ்வரூப ஞாநத்திற்கே சப்தத்தினை சிருஷ்டிக்கும் ஹேதுத் தன்மை யிருத்தலின். சப்தத்தினைச் சிருஷ்டிக்கும் ஹேதுத் தன்மையினுல் பிரசித்தியோடு கூடிய ஸம்ஸர்க்க ஞாநத்திற்குப் பிரமா சப்தப் பிராமாண்ய பிரயோஜகத் தன்மையால், அந்யதா சித்தி யாகலின். தேகாதி, புத்தி பரியந்தமான அஹம் பிரத்யய விஷய ரூபமாய், அந்யவ

றின் அநாத்மத் தன்மையின் வியாவிர்த்தி வாயிலாய், பிரதீதி யாவதன் மத்தியில், உனது ஸ்வரூபம், அவற்றுள் ஒன்றா? அவற்றின் தொகுதியா? என்று கூறற்க; அந்த அஞ்ஞாந காரியமாய், எனது போகத்தின் உபகரணத் தன்மையினால் எனது பிரதீதிக்கு விஷயமாய், குடை சாமரம் முதலிய அந்ய போக சாதநங்கள் போன்று எனது உபஸர்ஜநத் தன்மையினால் பிரதீதி யாவதற்கு, வெவ் வேறாய், அல்லது, ஒன்றாய்ச்சேர்ந்து, காரிய காரண விலக்ஷண, விடத்தகாததாய, கொள்ளத் தகாததாய ஸ்வபாவமாய், பிரத்யய விஷய மின்றியதாய்ப், பரம பிரிய தம, தன்னி னின்றும் அந்யமாய எல்லாவற்றினையும் விளக்குவதாய், எப்பொழுதும் வியபி சார மற்றதா யுள்ள, ஆத்ம வஸ்து ஸ்வரூபத் தன்மை பொருந்தாமையின். தேஹாதி புத்தி பரியந்தங்களி னின் றும் எச் சொரூபம் உன்னால் பரிசேஷஞ் செய்யப்பட்டதோ, அதுவே உனது ஸ்வரூபம் எனக் கிரஹிக்க என்று கழறற்க; அதுவும் அஞ்ஞாத மாகலின். அஞ்ஞாநத்தினை விட்டு அதன் விஷய ஸ்வரூப மாத்ர மாகிய பிரத்யக்த் தன்மையினைக் கிரஹிக்க என்று கூறற்க; அதுவும் ஜீவேசுவர, அதன் பிந்நத் தன்மை முதலிய ரூபத்தினால் நிர்ணயஞ் செய்தற்கு அசக்கியமாய் ஸந்தேஹத்தாற் கவரப்பட் டிருத்தலின். நிர்ணயத்தினா லென்? வஸ்து ஸ்வரூபம் நிர்ணயிக்கப் பட்டே யிருக்கின்றது என்று அரையற்க; எல்லா விசேஷத் தோடும் தத்வத்தினைக் கேட்பவனைக் குறித்து இஃது உத்தர மன்றாகலின்.

ஸாமாந்ய விசேஷம் இன்றியதில் விசேஷமாக அறியும் இச்சையே பொருந்தா தென்று புகலற்க; அந்த ஸாமாந்ய



விசேஷ மின்றியதே கூற வேண்டுதலின். அஞ்ஞாநத்தி னின்றும் அந்யமாக, நிச்சயிக்கப்பட்ட ஸ்வரூபத்தில் ஸந்தேஹமே பொருந்தா தென்று புகலற்க; அஞ்ஞாநம் இதுவரையிலும் நிவிர்த்தி யாகாமையின். அஞ்ஞாநம் இருக்குங் காலத்திலே விவேக திருஷ்டியினால் அதனி னின்றும் பகுக்கப்பட்ட ஸ்வரூப நிர்ணயத்திலும் அந்த அஞ்ஞாநத்தினாலேயே விஷயம் செய்யப்படில் சந்தேஹம் பொருந்துதலின்.

அத்தியாஸஞ் செய்யப்பட்ட அஞ்ஞாந ஸ்வரூபம் இருக்கில், அதன் அதிஷ்டாந ஆத்மாவின் விவேகம் அசக் கியமே யாம். அதிஷ்டாந பேதத்தோடு அத்தியாஸம் செய் யப்பட்ட பதார்த்தங்கட்கு வேறு ஸ்வரூப மின்மையின். அதனால் விவேக திருஷ்டியினால் அதிஷ்டாந ஸ்வரூப ஆத்ம தத்வத்தினை நிச்சயஞ் செய்யில், அப்பொழுது ஆண்டு அத்தி யாஸம் செய்யப்பட்ட அஞ்ஞாந, அதன் காரியங்கள், அதனி னின்றும் பேதமாக ஆண்டு இன்று என நிச்சயஞ் செய்து அறிக. ஆகவே, ஆண்டு அஞ்ஞாந மின்மையின், ஸந்தேஹம் பொருந்தாமையின் பிரசிநமே பொருந்தா தென்று கூறற்க; இதனாலும் த்வைத திருஷ்டா அறியப்படாமையின. சுத்த னாகிய கூடஸ்தனுக்கு த்வைதத்தினை யறியுந் தன்மை பொருந்தாது. மோக்ஷ காலத்திலும் த்வைதத்தினை யறியுந் தன்மை வருதலின்.

அற்றேல், மோக்ஷம் நித்தியமாக எப்பொழுதும் இருத்தலின், எல்லாக் காலமும் மோக்ஷ காலமே. "விடு பட்டவன் விடுபடுகின்றான்" என்னுஞ் சாஸ்திரத்தினால்.

அந்யதா, மோக்ஷத்திற்கு ஒரு காலத் துடையதாந் தன்மை
யினால் அநித்யத் தன்மை வரும். ஆகவே, மோக்ஷ காலத்தில்
த்வைத தரிசநப் பிரசங்கம் இஷ்ட மன் றென்ப தின்று;
இப்பொழுது அது பார்க்கப்படுதலின் எனின், அற் றன்று;
ஸர்வ லோகத்தி லுள்ளவர்களின் அநுபவ விரோதத்தினால்.
த்வைத தரிசந காலத்தில் எவரும் மோக்ஷத்தினை அநுப
விப்ப தில்லை. ஸர்வ லோக விருத்தமான அர்த்தத்தினைச்
சுருதியுங் கூறுவ தில்லை. இங்ஙனங் கொள்ளாக்கால், கல்
லோடங் கடத்துவோனது வாக்கியத்திற்கும் தனது அர்த்
தத்தில் பிராமாண்யம் வரும். அதனால், ஸர்வ காலமும் மோக்ஷ
கால மன்று. ஸர்வ லோக அநுபவ விரோதத்தினால். ஆச்சரி
யம்! ஆயின், எவ் வெல்லாரும் அநுபவிப்பவர்களோ, அவர்
களே த்வைதத்தினை அறிபவர்கள் என உன்னால் நிச்சயிக்கப்
பட்டது. ஆகவே, தனது அதீந நிச்சயத்தி னுடைய
த்வைதத்தினை அறிபவர்க ளிடத்தில் பிரசிநம் யாது?

இதனால், என்? இதனால், இஃதாம், இவற்றுள்,
எது த்வைதத்தினை யறிவது? அதுவே சச்சிதாநந்த பரி
பூரண ஆத்ம ஸ்வரூப மோக்ஷத்தின் ஆவிர்ப்பாவத்தினைப்
பிரதிபந்திக்கின்ற தென் றறிக. ஆயின், அவற்றிற்குப்
பிரதிபந்தகம் இருக்குக. த்வைதத்தினைப் பார்க்காத
எனக்கு மோக்ஷம் ஏன் உண்டாகா தெனின், ஆயின், நீ
இவற்றி னின்றும் பிந்நமா? எதனால் நீ த்வைதத்தினை
அறியாதவ னாகின்றாய்? ஸம்சய மென்? அவற்றை ஆத்மத்
தன்மையினால் அநுபவிப்ப தில்லை. அவற்றின் ஸுக துக்
கங்கள் எனக்கு லேப மின்மையின். அஹோ! ஆச்சர்யம்!
அநேக விதமான தேவ திர்யக் மநுஷ்யாதி பேத பிந்நமாய



அவற்றினைப் பார்த்துத் "த்வைதத்தைப் பார்க்க வில்லை"
என்று கூறும் உனது வசநத்தை எங்ஙனஞ் சிரத்தை செய்
வது? தத்துவத்தினை யறிய இச்சிக்கும் முமுக்ஷுவாகிய
ஸந்நியாஸிக்கு, அசத்தியத்தினைக் கூறுத லாகிய இஃது
உசித மன்று. அற்றேல், உன்னோடு நான் அபிந்நனே.
ஆகவே, எனக்கு அஸத்தியம் கூறுந் தன்மையினை அடை
விக்கும் உனக்கே அஸத்தியத்தினைக் கூறுந் தன்மை
வருகின்ற தெனின், ஆயின், எந்த நான் உன்னால் ஆத்மத்
தன்மையினால் பார்க்கப்பட்டதோ, அது த்விதீயமா?
அத்விதீயமா?

முதலாவ தாயின், இதுவும் வேறு தோஷமாம். வித்வா
னை உனக்கே ஆசாரியராய்ப் பிரஹ்ம ரூபமாக சிந்தித்து,
த்வைத வார்த்தையினை யறியாது இருக்கும் என்னைப்
பார்த்து இரண்டாவது சத்தினைக் கற்பிக்கின்றாய். "ஒன்றே
அத்விதீயம் ஈண்டு நாநா அற்பமு மின்று" என்பன வாதி
சாஸ்திர விரோதத்தினாலும். ஆயின், புகன்ற தோஷ மின்
மையின், அத்விதீய பக்ஷம் இருக்குக எனின், ஆச்சரியம்!
ஆயின், அத்விதீய என்னை ஆத்ம ரூபமாக எங்ஙனம் அறிந்
தவ னாகின்றாய்? உமது வசநத்தினாலும், திருஷ்டாந்தமாகக்
கொடுக்கப்பட்ட சாஸ்திரத்தினாலும் எனின், ஆயின், இவ்
வாறு, அறிந்தவனா யிருக்கின்றாய். இதற்கு மேல கேட்கத்
தக்க தின்று. ஆத்மா அறியப்படில் அறியப்படாது வேறு
வஸ்து இருப்ப தில்லை. யாது கேட்கத் தக்கதா யிருக்கின்றது?
அநாத்மா இருக்கின்ற தெனின், அற் றன்று; "அயே!
மைத்ரேயி! ஆத்மாவின் தரிசநத்தினால், கேள்வியினால்,
மநநத்தினால், விஞ்ஞாநத்தினால் இவ்வெல்லாம் அறியப்பட்ட

தாகின்றன" என்னும் சுருதியால், ஆத்ம தரிசநத்தினுல் மற்றைய வெல்லாம் அறியப்பட்ட தாகின்ற தென்று கூறி யிருத்தலின்.

அற்றேல், ஆத்ம தரிசநத்தினுல் மற்றைய வெல்லாம் அறியப்பட்ட தாகின்றன வென்பது பொருத்த முடைத் தன்ரும்; எதனு லெனின், அங்ஙன மன்ரூ, மற்றைய வெல்லாம் ஆத்மாவினும் பிந்நமா? அபிந்நமா? முதல தன்று, அந்யத்தைப் பார்த்தலினுல் மற் ருென்றைப் பார்த்தற்கு ஸமர்த் தின்மையின். கடத்தைப் பார்க்குங்கால படம் பார்க்கப்பட்ட தாகின்ற தென்று கூறுதற்கு ஸமர்த் தின்று. இங்ஙனங் கொள்ளாக்கால், அவ் விரண்டற்கும் அபேதம் வருதலின். இரண்டாவ தன்று, ஆத்மாநாத்மாக்கட்கு விரோத மாகலானும், பரமார்த்த ஸத்திய ஆத்மாவோடு அபிந்நமாயவற்றிற்கு, "இதன்று, இதன்று" என்பதாதியால் நிஷேதஞ் செய்தற்கு அசக்கிய மாகலின், பாதம் பொருந்தா மையானும். அந்யதா, ஆத்மாவும் பாதிக்கப்படுவதால் சூந்யமே எஞ்சும். ஆகலால், ஆத்ம தரிசநத்தினுல் எல்லாம் அறியப்பட்டதா மென்பது பொருத்த முடைத் தன்ரும். இது தோஷ மன்று.

56. எதனுல் த்வைதத்தின் சத்தை ஆத்ம சத்தையே யாம். ஆத்மாவின்கணணே ஸர்வ ஜகத்து மிருக்கின்றது. ஆகலின், (ஆத்மா) பார்க்கப்படில் (எல்லாம்) பார்த்ததாம். கேட்கப்படில் கேட்டதாம்.

ஆத்ம சத்தையி னின்றும் அந்யமாக த்வைதத்திற்குச் சத்தை யின்மையின், ஆத்மா அறியப்படில் எல்லா த்வைத



மும் அறிந்த தாகின்றது. எங்ஙனம் இரஜ்ஜுவின் ஸ்வ ரூபம் அறியப்படில் ஆண்டு அத்தியஸ்த மான, ஸ்ருக் தண் டாதிகளின் ஸ்வரூபம் அறியப்பட்ட தாகின்றதோ. அது போன்று ஆத்மா அறியப்படுங்கால் எல்லாம் அறியப்பட்ட தாகின்றது என்பது பொருத்த மன் றென்ப தன்ரும்.

இதனுனே, விதி நிஷேத சாஸ்திரங்கட்கும் பொருத்த மின்மை யின்று; அது எங்ஙனம்? "இவ் வெல்லாம் எதனுல், இவ் வாத்மா", "ஹே ஸௌம்ய! விருஷ்டிக்கு முன் இவ் வெல்லா ஜகத்தும் ஸத்தாகவே யிருந்தது.", "ஒன்றே அத்விதீயம், இவ் வெல்லாம் ஆத்மாவினதே", "இவ் வெல் லாம் படைப்பிற்கு முன் பிரஹ்ம மாகவே யிருந்தன.", "நான் மநு வாவேன், சூரிய னுவேன்.", "யாண்டு இவனுக்கு எல்லாம் ஆத்மாவே யாகின்றது.", "இவ் வெல் லாம் நாராயண ரூபமே. எது முன் னிருந்தது? எது இனி உண்டாகின்றது." என்பன வாதி விதி சாஸ்திரங்க ளாம். அங்ஙனமே, நிஷேத சாஸ்திரமும், "ஈண்டு நாநா அற்பமும் இன்று. அதனுல் உபதேசம். இதன்று, இதன்று, இதனி னின்றும் இன்று." இதன்று என்பது அந்யமாக எது இருக் கின்றது, "இதனுல், அந்ய மெல்லாம் மித்தையாம்.", "அத னுல் இரண்டாவது இருப்ப தில்லை. ஈண்டு அற்பமும முன் னிருந்தன வல.", "அஸத் இருந்த தில்லை, ஸத் இருந்த தில்லை," என்பன வாதியாம். லோகத்தில் இரஜ்ஜு வில் மாலை முதலிய அத்தியாஸத்தினை யுடையவனைக் குறித்து, "இவ் வெல்லாம் இரஜ்ஜுவாம். ஈண்டு மாலை முதலியன இன்று" என்று உபதேச முண்டாகின்றதா மாயினும், இரண்டு உபதேசங்களின் மத்தியில் எது

ஸிரேஷ்ட முடையது எனின், இரண்டும் ஒரு அர்த்த முடையதேயா மாயினும் விதிக்கு கிஞ்சிற்று அதிசய மிருக்கின்றது.

ஆண்டு, பார்க்கப்படும் பதார்த்தங்களின் ஸத்தை யாது, அது ஆத்மாவே எனக் கூறின், அதன் அந்ய மாய வெல்லாம் இன்றே. ஆத்மாவே பரிபூரண மென்னும் ஞானம் நேரே உண்டாகின்றது. நிஷேதத்திலோ, நிஷேதத்தின் அதிஷ்டானத் தன்மையினால் பொருளினா லுண்டாகின்றது. ஆயின், இருவிதப் பிரவிர்த்தி யெங்ஙன மாம்? விதியினா லேயே புருஷார்த்தம் முடிவு பெறுதலின் எனின், அற்றன்று; அதிகாரி பேதத்தினால் இரண்டும் உபயோக மாகலின். ஸம்ஸார துக்கத்தினால் அத்தியந்தம் நாசம் பண்ணப்பட்ட மநதினை யுடைய சிலர், அதன் நிவிர்த்தி யினையே முதலில் இச்சிக்கின்றனர். அவர்க ளிடத்தில் முதலில் நிஷேத வாக்கியமே உபயோக மாகின்றது. விதி வாக்கியமோ பின்ன ராம். எங்ஙனம்? ஸர்ப்பத்தினை ஆரோபித்துப் பயத்தினால் நடுங்குகின்றவ னிடத்தில் இது "ஸர்ப்ப மன்று" என்னும் நிஷேதமே முதலில் உண்டாகின்றது. விதி உண்டாவ தில்லை. எவன் அத்தியந்தம் சாந்தத்தை யுடையவனாய் இச் சகத்தின் தத்வம் யாது? என இவ்வாறு அறிய இச்சிக்கின்றானோ, அவனிடத்தில் "இவ்வெல்லாம் இவ்வாத்மா" என்ற உத்தரங் கொடுத்தல் நியாய முடைத்தாம். நிஷேதமோ பின்னர்ப் பொருந்துகின்றது. எங்ஙனம்? ஸர்ப்பத்தினை அத்தியாஸம் செய்து, அதன் விரோதி ஞானத்தினால் நிர்ப்பயனாய், முன்னர் இருக்கும் "இது யாது" எனக் கேட்கின்றனனோ, அவனிடத்தில் "இரஜ்ஜு" என்றே உத்தரங் கொடுத்தல் நியாய மாம். நிஷேத மன்றாம். ஆதலால், அவஸ்தையின் பேதத்தினால் இரண்டும் உபயோக மாதலின், ஒன்றற்கும் வையர்த்திய மின்று. இதனால், விதி நிஷேதங்களால் பரிபூரண சச்சிதாநந்த பிரத்யகாத்மா என்பது சித்த மாயிற்று.



அற்றேல், அங்ஙன மாயினும், இத் த்வைதத்தின் திருஷ்டா யார்? என்பது இதுவரையிலும் நிச்சயிக்கப்பட வில்லை யெனின், எதை நீ கேட்கின்றாய்? நான் யார் எனின், பிரஹ்மமே. ஆயின், இங்ஙனம் பிரஹ்மத்திற்கு விகாரித் தன்மை பொருந்துகின்ற தெனின், இவ் விகாரம் யாது? த்வைதமா? அதன் திருஷ்டியா? முதல தன்று; பிரஹ்மத்திற் கந்ய மாய த்வைத மெல்லாம் நிஷேதிக்கப்பட் டிருத்தலின். எது இன்று, அது, நரசிங்கம் போன்று ஒன்றற்கும் பரிணம மாவ தில்லை. அதனால், இதற்கு வைலக்ஷண்யம் திருஷ்டியே யெனின்; ஆயின், பிராப்த அப்ராப்த விவேகத்தினால் திருஷ்டியே பரிணாம மாகுக. அதன் அந்ய மான திருசியம் இன்மையின்.

ஓம், (சம்மதம்) எனின், அற்றன்று; பல ரூபமான திருஷ்டிக்கு ஆத்ம ரூப அந்தர்பாவத்தினால் அதன் பரிணாமத் தன்மை பொருந்தாமையின். தான் தனக்குப் பரிணாம மன்று; கார்த்ஸ்ந்யம் (எல்லாம்) ஏக தேசம் என்னும் விகல்பங்களால் பரிணாம பக்ஷம் பொருந்தாமையானும். அற்றேல், விவர்த்த பக்ஷத்திலும் இத் தோஷம் ஸமானமாம் எனின், அற்றன்று; விவர்த்த ஸ்வரூபம் அறியாமையின். அதிஷ்டான ஸ்வரூபத்தி னின்றும் அந்யமாய் விவர்த்தமாக ஒரு வஸ்து இருப்ப தில்லை. எதனை ஆசிரயித்து, கார்த்

ஸங்ய ஏக தேச மென்னும் விகல்பங்கள் உற்பத்தியாம்.
பின்னரோ, அதிஷ்டானமே தோஷ வசத்தால் விலக்ஷணா
காரமாக விளங்குகின்றது, அதனை விவர்த்த மென்று கூறு
கின்றனர். அந்த விலக்ஷணாகாரம் எதற்கு எனின், உண்மை
யாக ஒரு அதிஷ்டானத்திலும் (இன்றாம்.) அது பாதிக்கப்
படுதலின். அந்ய விடத்து, பிரதீதி யின்மையின். வேறு
பங்கியா (மார்க்கத்தா)ல் அஸத் கியாதியின்கூற்றே இஃதாம்
எனின், அற் றன்று; கியாதியும் அத்தியாஸ மாகலின்.
அஸத் கியாதி யாகிய சார்வாகனாலும் அங்ஙனம் அங்கீகரிக்
கப்படாமையின். சர்வ பதார்த்தங்களும் சூந்ய மென்று
கூறும் சூந்ய வாதமோ முன்னரே கண்டிக்கப்பட் டிருத்
தலின். இந்தக் கியாதியின் அத்யாஸம் யாது எனின்,
உண்மையில் பிரகார (விசேஷண) மின்றி யிருப்பதற்கு
பிரகாரத்தோடு கூடியதாக விளங்குதலே யென்று கிரஹிக்க.
அந்தப் பிரகாரத்தின் ஸ்வரூபத்தினைக் கூறுக எனின்,
உண்மையில் நிர்விகல்பக் கியாதி ஸ்வரூபமே யாம். ஆயின்,
அங்ஙனமே அறியத் தக்க தெனின், அது ஞானிக்கு
உசிதமே. பிராந்தனுக்கு அது பிராந்தித் தன்மை யாகலின்
உசித மன்றாம். அவனால், அதிகமாக என்ன அறிந்திருக்
கின்றான் எனின், ஒன்று மின்று. இவன் பிராந்தன்
எங்ஙன மெனின், அந்யப் பிரதீதியினை அந்ய விஷயத்
தன்மையாக அபிமானித்தலினாலே யாம். எங்ஙனம்? லோகத்
தில் இரஜ்ஜுவினை அறிகின்றான். "இது ஸர்ப்பம்" எனச்
சர்ப்பத்தினை அபிமானிக்கின்றான். இவ் வபிமானம் யா
தெனின், பரமார்த்தமாக இருக்கும் விஷயம் விளங்குதலை
யும் அஸத்தாக நிச்சயித்த லாம். உண்மையாக இரஜ்ஜுவின்
ஞானமேயாம் ஆயின் எங்ஙனம்? ஸர்ப்பத்தினைக் கவருதலாக



அந்த ஞானம் விளங்குகின்றது எனின், ஆகார ஸமானத்
தன்மையினாலும், தோஷ வசத்தினாலும் என்று கூறு
கின்றோம். இதனானே, ஞானத்தின் பின் இரஜ்ஜுவே
ஸர்ப்பமாக என்னால் அறியப்பட்டது என்று கொள்ளுகின்
றான். ஆயின், ஸர்ப்பம் அறியப்படவே யில்லையா? ஸம்சய
மென்? இங்ஙன மாயின், அநுபவ விரோத மெனின்,
அற் றன்று; பிராந்தனது அநுபவ விரோத மிருப்பினும்
அவிரோத மாகலின். அவனுக்கு எது தோற்றிற்று, எது
தோற்ற வில்லை என்னும் விவேக மின்மையின். பிராந்தி
யின்றியவனுக்கு அதன் அநுபவம் இன்மையின், அநுபவ
விரோத அபாவத்தினால்.

அற்றேல், இங்ஙன மிருக்குங்கால் அதிஷ்டானமும்,
அதன் பிரதீதி யென்னு மிரண்டுமே, திருஷ்டாந்தத்தில்,
அந்யப் பிரதீதியும், அறியப்படும் தன்மையும் அஸத்வ
மாகக் கூறுதலின். தாஷ்டாந்தத்திலோ, அதிஷ்டானம், அதன்
பிரதீதி யென்னும் இரண்டும் ஆத்மாவே; ஸ்வயம் பிரகாசத்
தில் வேறு பிரதீதி அங்கீகரிக்காமையின். ஆகவே, அதன்
அந்யமாக விவர்த்தம் காண்பித்தற்கு அசக்கிய மாகலின்.
விவர்த்த வாதம் சென்று விட்டது. அதனால், தனது
சித்தாந்த பரித்தியாகம் ஸ்பஷ்டமாம் எனின், அற் றன்று;

அது பாலனது வியுத்பத்தி மாத்திர பிரயோஜனத்
தினால், உபநிஷத் தாத்பரிய விஷய மின்மையின். இங்ஙனங்
கொள்ளாக்கால், விபரீத திருஷ்டியானே த்வைதம் வருத
லின். அத் திருஷ்டி மித்தையே யெனின், மித்யாத்வம்
யாது? த்ரைகாலிக அஸத்வமா? அல்லது, அஸத்துத்

தன்மை ஸமாந மாயினும் ஒருகாலத்துப் பிரதீதி யாகுந் தன்மையா? முதல தன்று; இஷ்டப் பிராப்தியான். இரண்டாவ தன்று; அந்தப் பிரதீதியானே அத்வைத க்ஷதி அங்ஙனமே யிருத்தலின். அந்தப் பிரதீதி ஸாக்ஷியே யெனின், அற் றன்று; அது அஸங்க மாகலின். "இப் புருஷன் அஸங்கனே" என்னும் சுருதியினாலும், ஸாக்ஷிக்கு ஒரு காலத் தன்மை பொருந்தாமையானும்.

மற்றும், ஆத்மாவின் த்வைத திருஷ்டி பிரமாண சித்தமா? இன்றா? முதல தன்று; அத்வைத ஆகம விரோத மாகலின். இரண்டாவ தன்று; பிராந்தி சித்த பதார்த்தத்திற்கு அஸத்துத் தன்மை நியம மாகலின். இங்ஙனங் கொள்ளாக்கால், பிராந்தித் தன்மை பொருந்தாமையின். ஆகவே, ஆத்மாவிற்குத் த்வைத திருஷ்டி ஒரு காலத்துமே யின்று. ஆகவே, "அதைப் பார்ப்ப தில்லை. பார்த்தும் பார்ப்ப தில்லை." என்பதாதி சுருதி லோபமின்றிய திருஷ்டி ஸ்வபாவத்தினை யுடைய ஆத்மாவின், த்வைத திருஷ்டியினை நிவாரணஞ் செய்கின்றது. "பாலனைக் குறித்து இச் சசல ஜகத்தும் பிரஹ்மத்தின் விவர்த்தகமாம். பண்டிதனுக்கு விவர்த்த மின்றிய ஆநந்தமாகச் சதா விருக்கின்றது." என்னும் ஸ்மிருதியும் ஆத்மாவிற்கு த்வைத தரிசந அபாவத்தை அங்கீகரிக்கின்றது.

அற்றேல், ஆத்மாவிற்கு த்வைத தரிசந அபாவத்தில், நித்திய முக்த அஸம்ஸாரிக்குச் சாஸ்திரத்தினால் சாதிக்கத் தக்க பிரயோஜந மின்மையால் சாஸ்திரம் அநர்த்தமாம் எனின; அற் றன்று; நித்திய முக்த அஸம்ஸாரிக்கு அத்தியந்தம் அஸத்தாகிய ஸம்ஸாரத்தை நிவிர்த்திக்கும் தன்மை



யினால் சாஸ்திரத்திற்குப் பிராமாண்யம் பொருந்துதலின். அத்தியந்தம் அஸத்திற்கு நித்திய நிவிர்த்தித் தன்மை யினால் ஆண்டுச் சாஸ்திர வியாபாரம் அநர்த்தக மெனின், அற் றன்று; சத்தியத்திற்கும் ஸமாந மாகலின். ஸத்தை சாஸ்திரம் நிவிர்த்திக்கின்ற தென்பது ஓரிடத்திலும் பார்க் கப்படுவ தில்லை. அநிர்வசநீயத்தினை நிவிர்த்தித்தற்குச் சாஸ்திர மெனின், அற் றன்று; ஆண்டும் அதரிசநம் ஸமாந மாகலின். அநிர்வசநீயத்தினை, நிவிர்த்திக்கின்றது என இரண்டும் அறியப்பட்டதான ஸ்தலம் இன்று. ஆகலின், "விடுபட்டவன் விடுபடுகின்றான்.", "நிவிர்த்தியானது நிவிர்த்திக்கின்றது." என்பன வாதி சாஸ்திரத்தினால், அத்தியந்தம் அஸத் தாகிய ஸம்ஸார நிவிர்த்தகத் தன்மை யினாலே சாஸ்திரம் பிராமாண்ய மாம். "ஜகத் பிராந்தியினை, வாக்கிய ஜந்ய ஞாநம், ஞாந மஹிமையினால் நித்தியம் நிவிர்த் திக்கின்றது. வாஸுதேவனால் ஏவப்பட்ட தநஞ்ஜயன் எங்ஙனம்? மீண்டும் கௌரவ குலத்தை நாசஞ் செய்தனன்." என்னும் ஸ்மிருதியும், ஜகத்து ரூபப் பிராந்திக்கு, நித்திய ஞாந ஸ்வபாவ மாகிய ஆத்மாவினது ஸ்வரூபத்தை விசாரித்து, அத்தியந்தம் அஸத்துத் தன்மையே கூறுகின்றது.

மற்றும், பிரஹ்மத்திற்கு அந்யமாகச் சாஸ்திரம் இருக் கின்றது என்று எவர்கள் அங்கீகரிக்கின்றனரோ, அவர்களுக் குச் சாஸ்திரம் அப்பிராமாண்ய மாகும் என்னும் பிரஸங்க மாகிய தோஷம் உண்டாகுக; அது பிரமாண முக்கிய ஸ்வ பாவ முடைமையின். எவர்கள் ஸதா அத்வைதமே யிருக் கின்றது என்று அங்கீகரிக்கின்றனரோ, த்வைத வார்த்தை யினை யறியாதவர்களோ, அவர்களிடத்தில் இத் தோஷம்

எங்ஙன மாம். அவர்களால் பிரஹ்மத்திற்கு அங்யமாகச் சாஸ்திரம், அல்லது, அதன் பிராமாண்யம் அங்கீகரிக்கப் படாமையின். இங்ஙனம் கொள்ளாக்கால், அவைகளானே அத்வைத நாசமாம். வேதத்தினைப் பிராமாண்யமாக அங்கீ கரிக்காத விடத்து பாஷண்டத் தன்மைப் பிரசங்கம் வரு மென்னற்க; அதன் அப்பிராமாண்யமும் அங்கீகரிக்காமை யின்.

வேதத்தினைப் பிராமாண்யமாக அங்கீகரிக்காத விடத்து அத்வைதத்திற்கு அப்ராமாணிகத் தன்மைப் பிரசங்க மாகிய தோஷ மின்று, த்வைத தரிசிகளைக் குறித்துப் பிரமாண அதீந சித்தியிலும், ஆத்மாவினிடத்திலும் அது தோஷ மாகலின். அற்றேல், த்வைதத்தினைப் பார்க்குந் தன்மை, ஆத்மாவின் தர்மமா? அல்லது, ஸ்வபாவமா? முதல தன்று; த்வைதம் வருதலின். இரண்டாவ தன்று; த்வைத ஸமூஹ மாய வெல்லாமும் ஸ்வயம் சித்தி என்னும் பிரசங்கத் தால எனின், அற் றன்று; சுருதியினாற் சித்தித்த ஆத்ம ஸ்வரூப அநுஸாரத்தினால் த்வைத ஸமூஹ மாகிய வெல்லாம் துச்ச மாகலின். துச்சத்திற்கு ஸ்வயம் சித்தி சம்பவியாது. ஸர்வ ஸாமர்த்தியமு மின்றிய அதற்கு, தன்னானும், பிற வற்றானும் சித்தித்தற்கு ஆற்றல் இன்மையின்.

அற்றேல், ஆத்மா பிந்ந மாகிய ஜகத்திற்கும், அதன் தரிசநத்திற்கும் துச்சத் தன்மை லௌகிகர்களின் அங்கீ காரமா? பரீக்ஷகர்களின் அங்கீகாரமா? முதல தன்று; அவர் கட்குப் பாதிக்கப்படாத் தன்மைப் புத்தியால், ஆண்டு வியாகதத் தன்மை யின்மையின், துச்சத் தன்மை தூர நிரஸ்த மாகலின். இரண்டாவ தன்று; பரீக்ஷகர்க ளாகிய



எல்லோருக்கும் ஒரு அங்கீகார மின்மையின். ஸர்வப் பிரமாணப் பிரமேயங்களைக் கண்டிக்கும் அப்பிரமாணிக னாகிய ஸர்வ சூந்ய வாதியினால் எல்லாவற்றிற்கும் துச்சத் தன்மை அங்கீகரித் திருத்தலின். அதன் விருத்தமாக நித்தியாநித்திய விபாகத்தினால் எப்பொழுது மிருப்பது, ஒருகாலத் திருப்பதாந் தன்மைகள், அக்ஷ சரண (கௌதம) கண புக் முதலியோர்களால் அங்கீகரிக்கப்பட் டிருத்தலின். அதன் விருத்தமாக ஸதா எல்லாவற்றிற்கும் ஸத்தியத் தன்மை ஸாங்கியர் முதலியோர்களால் அங்கீகரிககப்பட் டிருத்தலின். ஆகலின், பரீக்ஷகர்க ளாகிய எல்லோருக்கும் பரஸ்பரம் விவாதத்தினால் ஆத்மாவி னின்றும் அங்யவற் றிற்குத் துச்சத் தன்மை அறியப்படவே யில்லை. ஆகவே, லௌகிக பரீக்ஷகர்கட்கு விருத்த மாய ஜகத்தின் துச்சத் தன்மை எங்ஙனம் அங்கீகார பதத்தினை யடையும்? பரீக்ஷகர் களினது மதமும் ஒவ் வொன்றும் பரஸ்பரம் விருத்த மாக லின் தள்ளத் தக்கதே யென்று கூறற்க; அவ்வளவானும் ஒவ் வொருவரது அங்கீகாரமும் ஆண் டாண்டு வியாகத மின்மையின்; துச்சத் தன்மையில் அஃதின்மையின். ஈண் டும் எனது அங்கீகாரம் இருக்கின்ற தென்று கூறற்க; உனக்கு அப்ராமாண்ய மாகலின்; துச்சத் தன்மையினைக் கிரஹிக்கும் பிரமாண மின்மையின். பரீக்ஷகர்க ளாகிய பரஸ்பர விருத்தர்களின் மத்தியிலும் எவரது மதம் பொருத்த முடைத்து, எவரது மதம் பொருத்த மின்று என்னும் விநிகமகம் இன்மையின். ஒருவரது மதமும் கிரஹிக்கத் தக்க தன் றென்று கூறற்க; நித்திய நிர்துஷ்ட வேத மூலகத் தன்மையின் பாவ அபாவங்களினால் விசே ஷித்தலின். எவரது மதம் வேத மூல முடையதோ, அது

கிரஹிக்கத் தக்க தாம். எதற் கஃதின்றே, அது பாஷண்ட மதம் போன்று தள்ளத் தக்க தாம்.

ஆயின், ஆச்சர்யம்! அந்நியத்தாற் சென்றும், சுருதியானே விசுவாச மாயின், சுருதி சித்த மதமே துஷ்டமின்றிக் கிரஹிக்கத் தக்கது என்பதால் அதன் அந்யம் கிரஹிக்கத் தக்கதே யன்றும். அப்பிராமாணிக மாகலானும், சுருதி விருத்த மாகலானும். சுருதியோ, "ஹே ஸௌம்ய! ஸ்ருஷ்டிக்குப் பூர்வம் இவ் வெல்லாம் ஸந் மாத்ரமாகவே இருந்தன", "ஒன்றே அத்விதீயம்", "அந்த இது, ஈ தன்று ஈ தன்று", "அதற்கு இது உபதேசமாம். நான்காவது அமாத்திரை யாம். வியவகரிக்கத் தக்க தன்றும். பிரபஞ்ச நாச மாம். சிவம், அத்வைதம்" என்னும் இவ் வாறுக, ஸஜாதிய விஜாதிய ஸ்வகத மின்றிய ஆத்மாவினைப் போதிக்கின்றன. ஆத்மாவின் அந்ய மாய வெல்லாம் துச்ச மென அங்கிகரிக்கின்றது. அதன் அந்யமாயவற்றிற்கு ஒரு காலத்தாயினும் இருப்பில், அத்வைத வியாகாதப் பிரசங்கத்தினால். ஆகலின், ஜகத்திற்குத் துச்சத் தன்மை சுருதியின் அங்கிகாரமே யாம். அது கௌடரால், "இந்த மாயை துச்சம், அநிர்வசநீயம், வாஸ்தவம் என மூ வகைத்தாகச் சுருதி யுக்தி லௌகிக மாகிய மூ வித போதங்களால் அறியத் தக்கது." எனக் கூறப்பட்டிருக்கின்றது. வசிஷ்டரும் இவ் வர்த்தத்தினை ஆச்சர்யத்தோடு கூடியது போன்று கூறுகின்றனர். "ஆச்சரியம்! சித்ரம். எந்தச் சத்திய மாகிய பிரஹ்மம் மனிதர்களால் மறைக்கப்பட்டிருக்கின்றது. அவித்தை யென்னும் பெயரை யுடைய அஸத்தானது முன்னால் தோற்றுகின்றது.", அங்ஙனமே, "அஹோ! சித்ரம்! தாமரையினின்



றும் உண்டான தந்துக்களினால் மலைகள் கட்டப்பட்டு இல்லாத தாகிய அவித்தையினால் ஜகத்து நனைக்கப்பட்டிருக்கின்றது" என. ஆகலின், த்வைத, அதன் தரிசநங்கள் துச்சமாகலின். ஸ்வத சித்த புத்த முக்த பரிபூரணாநந்த ஆத்மாவிற்கு, அதிர்ஷ்ட த்வயத் (இரண்டின்) தன்மை நன்கு பொருத்த மாயிற்று. ஆகவே, சுருதி, "நிரோத மன்று, உத்பத்தி யன்று, பத்த னன்று, ஸாதக னன்று, முமுக்ஷுவன்று, முக்த னன்று, என்பதே பரமார்த்தத் தன்மை." "அதுவே நிஷ்கலம் நிர்விகல்பம் நிரஞ்சநம் ஆகிய பிரஹ்மத்தை நான் அறிந்து நிச்சயமாகப் பிரஹ்மத்தை யடைகின்றேன்", "நிர்விகல்பம், அநந்தம், ஹேது திருஷ்டாந்த மின்றியது, அப்பிரமேயம், அநாதி, அதனை யறிந்து வித்வான் விடுபடுகின்றான்" என்பன வாதிகள் ஆத்மாவின் த்வைத தரிசந சூந்யத் தன்மையினைக் கூறுகின்றன. ஆதலால்,

57. ஸத்திய ஞாநம் அநந்தமாயும், பூர்ணாநந்த விக்ரஹமாயும் மந்திர வர்ணத்தினால் அடையத் தக்கதாயும் உள்ள ஆத்மாவினை நிச்சயித்து விடுபடுகின்றான்.

இவ் வித ஆத்ம ஞாநம் உண்டாகின்ற தில்லை யென்பது பொருத்த மன்று, சாதந சதுஷ்டயத்தோடு கூடிய முமுக்ஷுவிற்கு, மநந நிதித்தியாஸநங்களினால் உபகாரஞ் செய்யப்பட்ட சிரவண அநுஷ்டாநத்தின் பின்னரே, அதன் உத்பத்தி யறியப்படுதலின். இங்ஙனங் கொள்ளாக்கால், அவ்வித ஆத்மாவினைப் பிரதிபாதிக்கும் ஆகமங்கட்கு அப்ராமாண்யம் வரும்.

உத்பத்தி யான ஞாநமும் வேறு சாதநத்தின் அபேக்ஷையினால் பலத்தினைக் கொடுத்தற்கு விலம்ப

மாகின்றதென்று புகலற்க; "இதனைப் பார்த்து ரிஷி வாமதேவர் கூறினார். நான் மநு வாவேன். சூரியனாவேன்", "பிரஹ்மத்தினை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றான்", "ஆத்மவித்து சோகத்தினைக் கடக்கின்றான்" என்பனவாதி சுருதிகளினால், ஆத்ம ஞாந அதன் பலன்கட்கு ஸமாந காலம் கூறப்படுதலின். மத்தியில் வேறு சாதநம், கால விலம்பங்களின் அபாவ ஞாநத்தினால். "அதனையே யறிந்து மிருத்யுவினைக் கடக்கின்றான். மோக்ஷத்தின் பொருட்டு வேறு மார்க்க மின்று." என்பதாதியால், வேறு சாதநத்தின் நிஷேதம் கேட்கப்படுதலினாலும். ஆகலின், அமிர்தத் தன்மையின் சாதந மாகிய ஸங்யாஸ ஸஹித ஆத்ம ஞாநமே யத்தநத்தினால் ஸம்பாதிக்க. அஃது இன்றியிருக்கில், எதனால் மஹத் தாகிய நஷ்டம், "ஈண்டு அறியின், ஸத்தியம் இருக்கின்றது. அறியா திருக்கின் பெரும நஷ்டமாம்." என்னு மிடத்துக் கேட்கப்படுகின்றது. பிரஹ்மாத்ம ஞாந முண்டாயினே, வித்துவானுக்குப் பலத்தோடு கூட வித்தையின் உத்காரம் ஸ்மரிக்கப்படுகின்றது.

"வித்தை யாகிய விக்ரஹத்தைக் கிரஹிக்காமையினால் மறைக்கப்பட்ட பிரத்யகாத்மா வாக்ய உத்தம புருஷனை முநி புத்தியால் முஞ்சத்தி னின்றும் ஈஷிகை போன்று காரிய காரண ரூப விகார கோசத்தி னின்றும நன்கு வேறு பிரித்துச் சம்சார துக்க சமுத்திர மானது எங்குச் சென்றது? இருந்ததும் இல்லை. இருக்கின்றதும் இல்லை இருப்பதும் இல்லை என்று சம்சய மின்றிப் பார்க்கின்றேன்", "இவ்வெல்லாத் த்வைதத்தையும் சித்திரத்தைப் போன்று பார்க்கின்றேன். நாச மற்ற நிஷ்கலங்க சித் ரூப, ஒரே சரீரத்



தில் ஆத்மாவாய், அத்வயமாய், அசிந்தியமாய், சுக ஏக ரூபமாய் இருக்கின்றேன். பிரபஞ்சத்தை எரிந்த கயற்றைப் போல் பார்க்கின்றேன்.", "கையி லுள்ள வில்வப் பழத்திற்கு ஸமாநமாக அத்வைதத்தையும் அநுபவிக்கின்றேன். பாம்புச் சட்டை போன்று சரீரத்தைப் பார்க்கின்றேன். இதனால் எனக்கு ஜீவநத்தைப் போன்று விளங்குதலும், மோக்ஷத்தினை அடைதலும் பிரசித்த மாம்.", "நித்தியமாய், த்வைத மற்றதாய், சிவ சித் பிரகாசத்தில், இரண்டாவது வஸ்து எங்ஙனம்? இருக்கும் என்று எனக்கு இன்று ஆச்சரியமாகத் தோற்றுகின்றது. முன்னம் இருந்தது என்னும் இச் சுருதிகள் முன்னர்ப் பாதிக்கப்பட வில்லையா என்? இருட்டினால் உண்டாக்கப்பட்ட இந்தத் த்வைதம் எதனால் இருக்கும்" என.

இவ்வாறு, சாஸ்திர ஆசார்யப் பிரசாதத்தால் அபரோக்ஷம் செய்யப்பட்ட தீவிர பிரஹ்மாத்ம தத்வனுக்குக் குரு பக்தி அபிநயமும் ஸ்மரிக்கப்படுகின்றது. இதனாலும் இந்த வித்தை அவசியம் உண்டாம். அங்ஙன மன்றோ, "உனது பாத பங்கயத்தின் ஆசிரயம் இன்றி எனக்குப் பர புருஷன் முன்னர் சத்தா யிருந்தும் அஸத் போன்று இருந்தது. உனது உபயசரணாரவிந்தத்தை ஆசிரயித்தலால் இப்பொழுது பேத புத்தி இருந்தது மில்லை, இருக்கின்றதும் இல்லை, இருப்பது மில்லை".

"எதனால் கிருபா பரவசனாய், வைத்தியஞ் செய்ய முடியாததாயுள்ள, எனது ஸம்ஸார ரோகத்தை நிவிர்த்திப்பதற்குப் பிரவர்த்தித் திருக்கும் உமது பாத பங்கஜ தூளியை

சிரசால் தாங்கிக்கொண் டிருக்கும் நானும் உம்மைச் சரீரம் விழும் பரியந்தம் உபாசிக்கின்றேன்'' என.

அற்றேல், வித்தையினால் அவித்தை நாச மாயினும், இக லோக பர லோக சஞ்சார லக்ஷண முள்ளதாய், நாநாவித யோகிப் பிராப்தி பரிகாரங்களால் அநேக வித துக்க சமூகத்தை யுடைய சமுசாரத்தி னுடைய நிவிர்த்தி எங்ஙன மாம்? அதன் ஹேதுவாய காம கருமாதிகள் அவ்வாறே யிருத்தலின். அவித்தையின் நிவிர்த்தியால் அத னுபாதேய மாய யாவற்றின் நிவிர்த்தியும் ஆவஸ்மா மெனக் கூறற்க; வைசேஷிகர்களுக்கு உபாதாநம் நிவிர்த்தியாயினும் க்ஷணம் காரியம் இருத்தல் போன்று நிவிர்த்தியாகா தென்னும் சங்கை தள்ள முடியாமையின். வேறு க்ஷணத்தில் நசித்தே விடுதலின் தோஷம் இன்றெனக் கூறற்க; அக்கணம் போன்று உத்தர க்ஷணத்திலும் பொருத்த மின்மையின் அபாவத்திற்கு அநுமானம் செய்தற்குச் சக்கிய மாகலின். அதனால், அஞ்ஞாநம் நிவிர்த்தியாயினும் ஸம்ஸாரம நிவிர்த்தி ஆவ தில்லை. பிரமாண மின்மையின் அதனால், பிரயாசை வியர்த்த மாம் என்னற்க;

58. அநர்த்தங்களுக்குக் கருமம் மூல மாம். அதுவும் ஞாநத்தால் பாதிக்கப்படடது. 'இவனது கருமங்கள் நாசத்தை அடைகின்றன' என்று அங்ஙனம் சுருதி ஆஞ்ஞை செய்கின்றது.

ஞாந முண்டாயினும் கருமத்தை மூலமாகக் கொண்ட ஸம்ஸாரம் நிவிர்த்தி யாவ தில்லை என யாது கூறப்பட்டதோ, அது பொருந்தாது; அவித்தை போன்று கருமமும் ஞாநத்



தால் பாதிக்கப்படுதலின். அவித்தை போன்று அதன் காரியத்தோடும் வித்தைக்கு விரோதத் தன்மை ஸம மாகலின். ரஜ்ஜு சாக்ஷாத்காரம் உண்டாயின் அதன் அவித்தை நிவிர்த்தியாகு மிடத்து அதன் காரியமாய ஸர்ப்பபாதிகளின் தோற்றம் பொருந்துமா றில்லை.

எதனால், ஞாநம் அஞ்ஞாநத்தையே நிவிர்த்திப்பதாம் என்று சாஸ்திரக்காரருடைய நிர்ணய மாம். இங்ஙன மாயின் பொருந்தாது எனக் கூறற்க; அஞ்ஞாந காரியமும் அஞ்ஞாநத்தின் வே றன்மையின். அஃதில்லாக்கால் அதன் இருப்புப் பொருந்தாமையின். இதில் பிரமாணம் இன்று என்னற்க; ''அந்தப் பராவரத்தைப் பார்க்கில் இப் புருடனது இருதயக் கிரந்திகள் பேதிக்கின்றன. ஸர்வ ஸம்ஸயங் களும் சேதத்தை யடைகின்றன. கர்மங்களும் நாசத்தை யடைகின்றன.'' என்னும் சுருதியால்.

இந்த வாக்கியம் அசுப கர்ம நிவிர்த்தி பரம் என்னற்க; கரும ஸப்தம் சுப அசுப சாதாரண மாகலின். வித்தையின் ஸாமர்த்தியமோ இரண் டிடத்தும் ஸம மாகலின். ''தேசிக பூர்வகமாய், சப்தத்தா லுண்டாய பிரஹ்மாத்ம ஏகத்வ விக்ஞாநமானது நெருப்புப் போன்று புத்தி பூர்வகமாகச் செய்யப்பட்ட பாவம் யாவற்றையும் தகிக்கின்றது'' என் னும் இவ்விடத்துப் புத்தி பூர்வகமாகச் செய்யப்பட்ட பாபத் தினையும் பிரஹ்ம ஞாநத்தால் தஹிக்கப்படுதல் ஸ்மரிக்கப் படுதலின். ''ஹே அர்ச்சுந! எங்ஙனம் ஜ்வலிக்கப்பட்ட அக்கினியானது விறகை எங்ஙனம் பஸ்பம் ஆக்குகின்றதோ, அங்ஙனமே, ஞாநாக்கினி சர்வ கர்மங்களையும் பஸ்ப மாக்குகின்

றது'' என்னும் இவ்விடத்துச் சர்வ சப்தத்தினுல் சர்வ புண்ணிய பாபங்களேயும் கிரஹித்துக் கொண்டு, அவ் வெல்லாப் புண்ணிய பாபங்களுக்கே ஞாநாக்கினியினுல் தஹிக் கப்படுந் தன்மை பகவானுனும் கூறப்பட் டிருத்தலி ுைலும்.

மற்றும், எவனது தரிசந மாத்திரத்தால் அந்யர்களுக் கும் பாபக்ஷயம் உண்டாயின், பிரஹ்ம ரூப மான அவனுக் குப் பாப க்ஷய மாவதில் எக் கதை யுள தாம். அஃது பகவான் வசிஷ்டரால் ''தத்துவத்தில் எவனது புத்தி அநு பவ பரியந்தம் பிரவிர்த்தித் திருக்கின்றதோ, அவனது திருஷ்டி கோசர மாய யாவரும் எல்லாப் பாவங்களி னின் றும் விடுபடுகின்றனர்'' எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அவ்வாறே, குல பவித்திரத்திற்கு ஹேதுத் தன்மை யும் பிரஹ்மவித்துக்கு ஸ்மரிக்கப்படுகின்றது. ''எவனது சித்தம் அபார ஸம்வித் சுக ஸாகர மாய இப் பரப் பிரஹ்மத் தின்கண்ணே லீநமாமோ, அதனுல் குலம் பவித்திர மாம். தாய் கிருதார்த்தத் தன்மை அடைவள். அவ்வூர் அதனுல் புண்ணிய முடைய தாம்'' என.

ஆகலின், கூறிய வாறே 'பிரஹ்மாத்மைகத்வ விஞ்ஞா நத்தினுல் கிருத கிருத்திய ஞகின்ருன்' என்னும் இவ் விடத்து விவாதம் செய்வதற்கு இட னின்று.

59. தனது ஆத்ம சுத்தியின் பொருட்டு, பிரகாசா நந்த யதியால் நிர்தோஷமான இந்த (வேதாந்த) சித்தாந்த முக்தாவலி செய்யப்பட்டது.



60. அத்வைதாநந்தத்தைக் கொடுப்பது. சத்திய ஞாநாதி லக்ஷண முடையது. நாராயணனை அடைவது. சத்துருவை ஜெயிப்பது.

61. கேட்பீராக' பிரகாசாநந்த யதியால் செய்யப் பட்டு, த்வைத மாகிய திமிரத்தைப் போக்குவதாய், வாதி யாகிய யானையின் மஸ்தகத்தைப் பிளப்பதில், சிம்மத்தின் பல்லைத் தாழ்த்தல் போன்றதுமாய, வேதாந்த சார சர்வ ஸ்வத்தை இப்பொழுது உள்ளவர்களால் அறியப்பட வில்லை. அதனை புருஷோத்தமனது யத்நத்தால் என்னுல் பூரண மாகக் கூறப்பட்டது.

62. எவரது மநம் பிரஹ்ம விசாரத்தில், ஒரு க்ஷண மாயினும் தைரியமாக இருக்கின்றதோ, அவரால் எல்லாத் தீர்த்த ஜலங்களிலும் ஸ்நாநம் செய்யப்பட்ட தாம். எல்லாப் பூமியும் தாநம் கொடுக்கப்பட்ட தாம். ஆயிரம் எஞ்ஞங் களும் செய்யப்பட்ட தாம். ஸகல தேவதைகளும் பூஜிக்கப் பட்டவ ராவர். தன் பிதுருக்களைச் சம்சாரத்தி னின்றும் உத்தாரணம் செய்யப்பட்டவ ராவர். இவர் மூன்று லோகத்தினும் பூஜிக்கப்பட்டவ ராவர்.

ஸ்ரீ பரம ஹம்ச பரிவிராஜகாசார்ய ஸ்ரீ ஞாநாநந்த பூஜ்ய பாத சிஷ்ய ஸ்ரீ பிரகாசாநந்த ஸ்வாமிக ளவர்களால் செய்யப்பட்ட வேதாந்த சித்தாந்த முக்தாவலி சமாப்தம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 6 | கினறதா | கின்றதா |
| 18 | 11 | பிரந்தி | பிராந்தி |
| | 18 | பரம | பரம் |
| 19 | 14 | கொள்ளக்கால் | கொள்ளாக்கால் |
| 20 | 16 | வியாவிருதத | வியாவிருத்த |
| 21 | 7 | யிருந்தலின் | யிருத்தலின் |
| 28 | 15 | அதவிதிய | அத்விதிய |
| 30 | 10 | ரூபம | ரூபம் |
| 33 | 13 | யினமையின் | யின்மையின் |
| 60 | 13 | ஆநந்தம | ஆநந்தம் |
| 75 | 14 | நம | நம் |
| 80 | 17 | எனறு | என்று |
| 90 | 8 | லுணடாய | லுண்டாய |
| | 10 | பார்த்தவில | பார்த்தவில் |
| 97 | 26 | வெலலாம் | வெல்லாம் |
| 98 | 9 | கால | கால் |
| 100 | 19 | கினறது | கின்றது |
| 104 | 10 | சிதத | சித்த |
| 112 | 8 | அவிதைத | அவித்தை |

# திருப் பூவண மடாதிபதி
## காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்
## இயற்றியன.

......○......

| | | ரூபா. அணா |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம் | 2—8 |
| 2. | விசார சாகரம் வசநம் | 2—0 |
| 3. | ஞாந வாசிட்டம் செய்யுள் | 2—0 |
| 4. | கீதாத் தீரயம் செய்யுள் (பாக்கெட்) | 1—0 |
| 5. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி செய்யுள் | 1—0 |
| 6. | ஹரிமீடே—ஹரிதத்வ முக்தாவலி வசநம் | 0-12 |
| 7. | வீரசேகர ஞாந தேசிக சரிதம் வசநம் | 1—0 |
| 8. | நைஷ்கர்ம்ய சித்தி வசநம் | 0—8 |
| 9. | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0—8 |
| 10. | வேதாந்த சித்தாந்த முக்தாவலீ வசநம் | 0—8 |
| 11. | மண்டல பிராஹ்மணோபநிஷத், ராஜ யோக பாஷ்யம் | 0—4 |
| 12. | ஸ்வாராஜ்ய சித்தி வசநம் | 0—4 |
| 13. | சீடாசாரம்—பால போதிநி உரை | 0—4 |
| 14. | ஈசாவாஸ்யோபநிஷத்—சங்கர பாஷ்யம் | 0—4 |
| 15. | கைவல்ய நவநீதம் (பாக்கெட்) | 0—3 |
| 16. | பக்தி (வைராக்ய) சதகம்—தோத்திரப் பிரகாச உரை | 0—3 |
| 17. | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0—2 |